| சீதை சொல்லிய கீதை | |
|---|---|
| எண் | பொருளடக்கம் |
| 1 | அன்பு நண்பன் |
| 2 | என்னை மறந்ததேன் |
| 3 | குணம் மாஸ்டர் |
| 4 | ஜோய் என் நண்பன் |
| 5 | ஜோய் நன்றி |
| 6 | கலாப மயில் |
| 7 | கண்ணே கலைமானே |
| 8 | கன்னி அழகு |
| 9 | காதல் பூங்காற்று |
| 10 | காதலுக்குத் தோல்வியில்லை |
| 11 | மணமில்லாத மணவாழ்க்கை |
| 12 | மனைவி அமைவதெல்லாம் |
| 13 | மனோ சாந்தராஜ் |
| 14 | முரண்பாடு |
| 15 | முதல் முத்தம் |
| 16 | நடத்தல் |
| 17 | நண்பன் |
| 18 | நட்பின் பெருமை |
| 19 | நட்பு |
| 20 | நீலோற்பலம் |
| 21 | நெஞ்சுக்குள் பெய்யும் பூமழை |
| 22 | பார்த்தேன் இரசித்தேன் |
| 23 | இராமா, சீதா, இராவணா |
| 24 | றெக்ஸ் ஜோசப் |
| 25 | சீதை சொல்லிய கீதை |
| 26 | சாந்தராஜ் |
| 27 | சித்தார்த்த கௌதமன் |
| 28 | சொன்னது நீதான சொல் |
| 29 | சுபத்திரா அம்மை |
| 30 | உமா அம்மை |
| 31 | உன் கண்ணில் நீர் வடிந்தால் |
| 32 | உன்னிடம் மயங்குகிறேன் |
| 33 | உறவுகள் தொடர் கதை |
| 34 | வண்ணக்கிளி அரியரெத்தினம் மாஸ்டர் |
| 35 | விக்கி |
| 36 | விழி மொழிந்த கவிதை |
| 37 | யார் யார் அவள் யாரோ |

# அன்பு நண்பனே

---

புள்ளி வைக்காது கள்ளம் கபடமற்ற அன்பில் போட்ட
மலர்க்கோலம்-பள்ளி நட்பு, ஆண்டுகள் பலபோனபின்பும்
அழியாத கோலம், நட்பினால் எரியும் அணையாத தீபம்

கள்ளம் கபடம் அறியாத பிராயத்தில்
கல்வியும், விளையாட்டுமான வாழ்வில்-இறை ஈந்த
கொடையாய் இன்று வரை நிலைக்கும் நட்பு

பள்ளி வாழ்வும் கலைந்த கனவாக-நண்பராய்ச் சிலரே
நெஞ்சில் நிலைக்க, எண்ணி இன்புற இன்பக் கனவாய்
இனிய நினைவாய் நிலைத்த நட்பு

நட்பு ***எண்ணிக்கையின் பெருக்கமல்ல***
***எண்ணங்களின் பரிணாமம், புரிந்துணர்வின் பேரின்பம்.***

பாசமாய் மச்சான் என அழைக்கும் ஜோய்-நேசமாய் ரவி
என அழைக்கும் அன்டன், Pax என விளிக்கும் அன்னதாஸ்
டேய் என்னடா செய்கிறாய்-ஜெகன், ஐயா என அழைக்கும் கிறிஸ்டி
ரவி என கூவி மகிழும் செயஸ்தியான், ஹலோ ரவி என்னும் சுவி

நட்பின் மற்றோர் பரிமாணத்தில், அறிவுப் பசிக்கு உணவாய்
அறுசுவையிலும் இனிதான அரிய நண்பர்களாய் ஆசான்களாய்
அருட் தந்தையர் மிலர், போல் சற்குணநாயகம், இராஜேந்திரம் ,
றெக்ஸ் ஜோசப் நன்னூல் வழியாய் ஞான குரு ஓஷோ

ஒரு மகனாய் பாசமோடு நடத்திய தம்பதிகளாய்
ரிச்சர்ட் பெர்னான்டஸ்-றெக்ஸ் ராணி . ஜஸ்டின் இராஜேந்திரம்
தன் குழந்தையாய் கண்ட வண பிதா ஹரல்ட ஜே வெபர்
அன்புகாட்டிய டெல்மாமோ, ஹேபியர், லோரியோ

அன்போடு பெயர் மாற்றி *Pax* என அழைத்த ஆசான்
சவரி ராஜா மாஸ்டர்

நண்பானாய் என் கவிதைகளுக்கு தோள் தந்தாய்
என் இரசிகனாய் என்னை ஊக்குவித்தாய்-இரசிகனின்றி
கவிஞனில்லை-இரசனையின்றிக் கலைகளுமில்லை

நட்பும் கலையே நண்பா, விழுந்து எழுவதால் நாம் வளர்கின்றோம்
பள்ளிப்பருவ நட்பு ***உதறுகாய் போல் ஒட்டிக கிடந்தது***
***காலம் செல்லப்***, பழகிக் களித்து பாசம் கனிய ***ஓடும் புளியம்பழமாய்***
கருத்துகளுக்கு மதிப்பளித்து மெல்லத் துறவு பூணுகின்றது.?

லம் போகின்றது, இனி காண்போமா என்பது ே
கேள்வியானது, தேடல் என்று ஏதும்
எனக்கில்லை, எல்லாம் எனக்குள்ளே
அனுபூதியில் உணர்வதே வாழ்வின் இரகசியம்.

இரு வழிப்பதை வாழ்வு-ஜனனம், மரணம்
ஒரு கதவின் இரு பக்கங்கள்
வாழ்வு அழிவதில்லை-மரணவாசல் வழியே
தொடரும் நிகழ்வு

இறை தந்த அன்புக் கொடையே நட்பு
காலில் முள் தைத்தால் பிடுங்கி விடலாம்
கருத்தில் முள் தைத்தால் புரிந்து கொள்ளலாம்
நட்பை துறந்து விடலாமோ?

உன் நட்போ என்றும் அரிதிலும் அரிதானது.
அன்பைப்போல் உயர்ந்தது ஏதுமில்லை
இறைவனோ தூய அன்பு நிலை
தாயே நாம் காணும் அன்பின் பெருநிலை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-10-8-2023

# என்னை மறந்ததேன் ?

---



ஏன் மறந்தாய் என்னை?, தேய்ந்து மறையும் வான் நிலவும்
மீண்டும் பிறந்தே, காதல் வானைத் தேடிவர, கரையை
தழுவி மடியும் அலைகளும் மீண்டும். மீண்டும் எழுந்தே
காதலைச் சொல்லி மகிழ, கடலிலும் காதலின் ஓயாத அலைகள்
வான் கடலிலும் நிலவின் காதல் நிலைகள்



மலையில் பிறந்து-மடுவில் விழுந்தும்
கடலைத் தேடும் நதியின் காதல் ஓய்ந்ததில்லை
சங்கமத்தில் காதலின் ஆனந்த நர்த்தனம்
காதலருக்கே புரியும் அன்பின் கீர்த்தனம்

கரைந்தே காதலைச் சொல்லும் குயிலிற்கும், கனிந்தே பதில்
குரல் கொடுக்கும் இணை, கரையும் குரலில் கல்லும் உருக
காதல் நெஞ்சம் உருகியே குரல் கொடுக்க, இணையில்லாக்
காதல் இசையாக காற்றினிலே வரும் கீதம்

கண்ணன் தேடுகிறான்-என் காதல் ராதை எங்கே?
இராமன் தவிக்கின்றான் என் காதல் சீதை எங்கே?
காலமெல்லாம் காத்திருப்பேன் என்றவளே
வார்த்தை மறந்தாள் -காதலைத் துறந்தாள்.



என் கண்களில் ஈரம் காயவில்லை, என் நெஞ்சுக்குள்
சோக எரிமலை உறங்கவில்லை, என் இதயத்திலும் நீ
எழுத்திலும் கவிதையாய் நீ, என் வண்ண ஓவியமாய் நீ,
ஏனடி என்னை வருத்திடும் காதல் புயலாய் மாறினாய் நீ?

வெந்த புண்ணில் விழும் அமிலத் துளிகளாய், நொந்த மனதில்
காதலே உன் பிரிவு, மலரைத் தழுவி நிலவும் காதல் சொல்ல
மனதை தழுவும் உன் நினைவும் காதல் சொல்ல, காதல் ஒரு தவம்-
கன்னி மனது ஒரு வரம், காதலின்றி சாதலும் பெரு வரம்

வண்டுபடு கூந்தல் வாசம் என்னை மயக்க-கண்பட நாணும்
காதல் மலர் முகம் என்னைக் கனவிலும் வருத்த
உண்டும் திகட்டாத இதழமுது எங்கே என இதயம் கேட்க
சுவாசத்திலும் உன் மணம், நேசத்திலும் உன் மனம்

அஞ்சுகமாய் கொஞ்சி, கோகிலமாய் கரைந்து
அன்னமாய் நடந்து-வண்ணமயிலாய் ஆடியவள்-என்
நெஞ்சுக்குள் காதல் கூடு கட்டிய தூக்கணம் குருவி எங்கே?

கனவும். நினைவும் காதலே என்னை வாட்ட
நிலவும், மலரும் காதலே உன்னை நினைவுட்ட
நேசம் மறவாத காதல் நெஞ்சே
என்னை மறந்த துயரம்தான் என்னே?



பண்ணால் துதிக்க-வண்ணத் தமிழ் பெண்ணாள்
வாசப் பூச்செண்டு கொடுக்க
காதல் மனம் தந்த கன்னிப் பெண்ணாள் எங்கே?

ஒரு மொழிக்காய் தவமிருந்து, ஒரு சேதிக்காய்
தூது விட்டு, துயில் கொள்ளும் அலைபேசி
துயில் மறந்து-பசி துறந்து, பஞ்சணை விடுத்து-
காதல் நோன்பிருக்கும் பரதேசி, காதலே என்னை நீ நேசி

விண்ணும், மண்ணும், விரி கடலும், நதியும். குயிலும்,
மலரும், வண்டும் காதல் சொல்ல-கலாபமயிலே
ஏனடி காதலைச் சொல்ல மறந்தாய்?
காதலன் என்னை மறந்தாய்?



உன்னைக் காணாமல் கண்களும் கண்ணீர் சிந்த
உன் மொழி கேளாமல் செவிகளும் வாடிச் சோர
என் வீணையிலும் சோகமடி, இதயத்தில் எரிமலையின்
குமுறலடி , என் கவிதையிலே ஒற்றைக்குயிலின் கானமடி



பாச மலராய் சூட நினைத்தவளோ, காகிதப்பூவாய்
கசக்கி எறிந்தாள், சோடிக்குயிலாய் பாட நினைத்தவனை
ஒற்றைக்குயிலாலாய் கரைய விட்டாள்.

காதலும் கன்னியருக்கு இளம் பருவத்தில் ஆடி மகிழ-இன்ப
விளையாட்டுப்போலும்?, கட்டித் தழுவி கொஞ்சி மகிழ்ந்தபின்
காதலையும் ஒரு மூலையில் தூக்கிப்போட , அன்பே உன் காதல்
விளையாட்டுக்கு கிடைத்த கரடிப்பெம்மை நான்தான்போலும்

விளையாடிக்களித்த பின் வீசி எறிந்திட,
வெந்தணலில் வீழ்ந்த புழுவாய் என் மனம் துடித்திட
உன் காதலும் பொய்தானா?
கன்னியர் மனங்களும் புதைமணல்தானா?

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-11-11-2023*

# குணம் மாஸ்டர்

அகவை எண்பதைத் தொட்டும்
இளமை குன்றாத அழகிய இளைஞன்
என்றும் பதினெட்டு வயது மார்ககண்டேயர்
அன்போடு நாம் அழைக்கும் குணம் மாஸ்டர்



எழுபதுகளில் நான் கண்ட ஆசிரியர்
உயிரியலே வாழ்வாக-வினா விடை வழிகாட்டி
அறிவுக்கு விருந்தாக-மாணவர் உயர்வுக்காய்- தம்
வாழ்வை அர்பணமாக்கிய வித்தகன்



எழுத்தும் அழகாக, எண்ணமும் உயர்வாக
வரை படங்களோ உயிர்ச் சித்திரங்களாக
மாணவர் வளர்ச்சியே தம் உயர்ச்சி
அண்ணாரின் மாறாத எடுகோள்-புரட்சி

உயிரியலும், தாவரவியலும் உயிர் மூச்சாக-
மாணவர் ஏறி உயர -நின்ற இடத்தில்
ஏணியாய் நின்ற தேவதூதர்

உயர்தர மாணவருக்காய் “உயிர்” பத்திரிகையை
மாதாந்தம் வெளியிட்டு-மாணவர்
எழுத்தும், ஆக்கமும், எண்ணமும் வளர
மாணவரோடு மாணவனான மாகலைஞன்

கல்லூரி நூற்றாண்டு விழா களைகட்ட-ஆர்வத்தோடு
தன் ஆக்கத்திறனை வெளிக்காட்டி அற்புதங்கள் புரிந்த மாயாவி
அன்பும். நட்பும் இழையோட, அழகிய புன்னகை இதழோட
குணத்திலும் இமயமாய், மணத்தில் மல்லிகையாய்
உழைப்பில் தேனீயாய் இன்றும் உழைக்கும் மாபுருஷர்

இயல், இசை நாடகத் தமிழ் வளர்த்து
பாடகர் குழுவே உறவுகளாக, பாடும் மீன் ஆட்டம் போட
மேடைகளில் பாடிக்களித்த வானம்பாடி

சீமைப்பபனைக்கு தாவரவியல் பெயர் தேடிக் களைத்து
கிழக்கு பல்கலைக் கழகமும் கைவிரிக்க
கூகுளில் தேடி சளைத்து கூவி தொலைபேசியில் அழைக்க
விடை சொன்ன குரு



காணும்போதெல்லாம் ''மகன்'' என்றே  மனதார
அழைத்து மனம் குளிர நாம் உரையாடல்
''என்ஸைகிளோபீடியா தொகுப்பை''
இலவசமாய் எனக்கீந்த வள்ளல்

ஒய்வு பெற்றபோதும். உயிரியலே வாழ்வாக-கடின
உழைப்பால் ''உயிரியல் வழிகாட்டி''உயர்தர மாணவருக்கு
நூலாக, உழைத்து களிக்கும் உன்னத ஆசான்
அபிநய சரஸ்வதியின் அழகிய புத்திரன்

ஒரு முறையல்ல. இருமுறை இதயநோயுற்றபோது
வைத்திய கலாநிதி சாந்தராஜ் -மறுவாழ்வளிக்க-
சாந்தராஜ் என்தன் மாணவன் என, என்னிடம்
புகழாரம் சூட்டி பாராட்டிய பெருந்தகை

பாடிக் களித்த உறவுகள் தேசம் கடந்து பறந்திட
பசுமை நிறைந்த நினைவுகள் நெஞ்சில் நிலைத்திட
காணும்போதெல்லாம் நண்பர்கள் நலம் கேட்கும் தந்தை
மனிதர்குல மாணிக்கத்தின் பெருந்தகை

சற்குணமே நற்குணமான சான்றோன்
குணம் குன்றாத குணரத்தினம்
வாழ்க பல்லாண்டு வாழ்கவே
***புரியா தவத்திற்கு இறை தந்த வரமே***
***நல்லாசிரிய பெருமக்கள்***

***எல்லாம் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க, எல்லோரும் நலம் வாழ்க***
Pax Ravichandra - 17.11.2021

# என் பிரியமானவனுக்கு

---

**உடுக்கை இழந்தவன் கைபோல் ஆங்கே**
**இடுக்கண் களைவதாம் நட்பு**-வள்ளுவர்






நன்றி சொல்ல வார்த்தையின்றி நாத் தடுமாற-
இறை கொடை நீ என்று இறைவனை மனம்போற்ற
குசேலனுக்கு கண்ணனாய் நண்பா நீ எனக்கு

படிக்கும்போதும் பாசமாய் என்னை நேசித்தாய்
பலகாதம் கடல் கடந்தும்-இன்றும்
நேசம் மாறாத நெஞ்சத்தால் என்னை நேசிக்கின்றாய்

இறை தந்த கொடையே என்றும் நீ நலம் வாழ-
இறைவனை வேண்டிட என் நெஞ்சம் மறவாது
இறைவன் நம்மோடு என்பதற்கு -இம்மானுவேல்
உன்னைத் தவிர எனக்கு சான்றேது

நாளும், பொழுதும் உன் வாழ்வு சிறக்க
நலமோடு நீடூழி , நீயும் உன் உறவுகளும் பல்லாண்டு
சீரும், சிறப்போடும் வாழ, நெஞ்சார வாழ்த்துகின்றேன்



கண்ணில் ஆனந்த கண்ணீர் துமிக்க
உன் அன்போ என்னை மகிழ்விக்க
நான் செய்யாத தவத்திற்கு-இறை தந்த வரம் நீ

வானூறும் நிலவும், தேனாறும் மலர்களும் சாட்சியாக
என் சித்தம், நினைப்பு. செய்கை உள்ளவும்
என் பிரியமானவனே-என் நெஞ்சம் உன்னை மறவாது

***அன்பே சிவம்–வாழ்வே தவம்***
*Pax Ravichandra*

# வள்ளல் என் நண்பன்

வள்ளல்களை இலக்கியத்தில் படித்தறிந்ததுண்டு
வள்ளலாய் வாழ்வில் கண்டது
உன்னைத்தான் என் நண்பா





கொடுத்துச் சிவந்த உன் கரங்கள்-நாளும்
கொடையால் நிறைந்திட இறைவனை வேண்டி
இறை தந்த பெருங்கொடை நீ என்றே
உன்னைப் போற்றுகிறேன்

இறைவன் புரியும் பேரதிசயமாய்-ஏழை
என் வாழ்வில் உன் நட்பு
இயேசுவே என்னோடு உன் வடிவில்
நண்பனாய் உறவாடும் பேரன்பு

மயிலுக்குப் போர்வை கொடுத்தான் பேகன்
முல்லைக்கு தேரீந்தான் பாரி
இருப்பதற்கு நிழலாய் வீடு தந்த இம்மானுவேல்
இதயம் நிறைய ஆனந்தம் தரும் இனிய நண்பன் ஜோய்



உயிருள்ளவரை என் உள்ளம் உன்னை
ஒரு போதும் மறவாது, இறை கொடையே -நாளும் தந்தை
இறைவனுக்கும் நன்றி சொல்ல என் நெஞ்சம் மறவாது




நாளும் பொழுதும் நலமோடு வாழ-உன்
வாழ்வில் சகல சௌபாக்கியங்களும் நிறைய
நன்றியோடு இறைவனை-நாளும்
வேண்டும் என் இதயம்.



அரிய நட்பாய் பள்ளி வாழ்வில்
அன்பிறைவன் தந்த கொடையே-ஆருயிரே
முதுமை வந்தபோதும் மறவாத உன் அன்போ
என் நெஞ்சில் நிலைத்த அரிய முத்து

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-29-09-2023

# கலாப மயில்



அன்ன நடையோடு பூங்குழல் ஆட-முத்துப்
புன்னகை செவ்வாயில் பூத்தாட
நூலிடையில் இசைபாடும் மேகலை
பொன்மார்பில் பூத்தாடும் மணமாலை



சங்குக் கழுத்தில் முத்துச்சரம்
செவ்வாழைக் கால்களில் கொலுசின் நாதஸ்வரம்
பிறை நுதலில் குங்குமம், இரு மனம் ஒன்றாக-இன்பக்
காதல் சங்கமத்தில் எங்கள் திருமணம்

காமன் கணையெல்லாம் கன்னியழகாய் கூத்தாட
அழகு பூத்தாட, காதல் மனம் கொண்டாட
பூங்குயிலின் மொழி சொல்லும் பூவை
ஆண்டாளாய் என்னைச் சூடிய கோதை

பங்கய முகத்தாள் கண்களில் குவளை பூக்க-
முறுவலில் முல்லை சிரிக்க-செண்பக மூக்கு
குமுதவாயில் அமுதச்சுவை, ஐம்பூவிளையும்
அமிர்தநிலம், பார்க்க மயங்கும் பசுந்தேறல்

கண்களுக்கு எழிலான ஓவியம்
கருத்துக்கு ஒப்பில்லாக் காவியம்
பிரம்மன் செதுக்கிய பேரழகுச் சிற்பம்
கண்பார்த்து நெஞ்செழுதிய அன்புக் காவியம்

நூல் படிக்கும் நூலிடையாள்-காமவேதம்
நான் படிக்கும் காதல் தேவதையாள்
அறம், பொருள் தாண்டி அறிந்த இன்பத்துப்பால்
காதற் காமம் கடந்து வீடு அடைய கற்பகதருவும்,
காமதேனுவுமான காதல் துணையாள்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
Pax Ravichandra 29-09-2023

# கண்ணே கலைமானே



கண் சுவைக்க கன்னியழகோ மலைத்தேன் என
மலைத்தேன், உண்ட நெஞ்சம் அமுதென ரசிக்க,
ஓவியமோ, காவியமோ மனம் வியக்க, கவிதையில்
வடிக்க பெருமான் கம்பனைத் துணைக்கழைத்தேன்

எண்ணமும். அவளாகி, இதயமும் அவளுக்காகி-
என்னவள் தந்த காதல் இன்பம்தான்
என்னே என வியந்தேன்



கண்டு மகிழ்ந்த இதயம் காதலாகித் தவிக்க
கன்னியோ அழகின் வானவில்
உண்டு சுவைக்க, இதயம் உருகித் துடிக்க
கன்னியோ காமனின் கரும்புவில்

விழிகளும் வேலாகி-புருவங்கள் வில்லாகி-காமன்
படையெனக் கன்னி, அழகும் திருமகள் வரமாக,
கற்பும் கண்ணகி அணியாக-கண்களில் காதலின்
நர்த்தனம், இதயத்தில் கானக்குயிலின் கீர்த்தனம்

பொட்டு வைத்த வட்ட முகமும், பூ மலர்ந்த கார்குழலும்
பட்டு வண்ண ரோஜாவுக்கு பரிசாக, நிலவழகோ,
மலரழகோ, நித்திலவல்லி கலையழகோ?
காளிதாஸன் கவிதைக்குள் அடங்காத பேரழகே?

கற்பகதருவில் பூத்த வாசப்பூவை, காமதேனுவில்
கறந்த காமத்துப்பாலை, காதலனாய் பருகிச்
சுவைத்தே இன்புற்றேன், கனிமொழியாள் அழைக்க-
காதலனாய் அணைக்க காதல் வரம் பெற்றேன்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-30-09-2023

# கன்னி அழகு



கார்குழலோ பூவனம்-கன்னியின்
அமுதச் செவ்விதழ்களில் தமிழ் மணம்
கயலாடும் விழிகளில் கலைநயம்
கன்னியோ சாயலில் மயிலினம்

கொடி இடையோ மெல்லினம்
புருவங்களோ வில்லினம்
நடையில் மெட்டியின் கட்டியம்
அபிநயா அழகின் பரத நாட்டியம்



திங்களில் முகம் எடுத்து-செவ்வாயில்
முத்துப்பல் பதித்து-கலை நயத்தோடு பிரம்மன்
சந்தனத்தில் செதுக்கிய அழகோ காவியம்
கண் பார்த்து மனம் எழுதிய காதல் ஓவியம்



பொன்மேனியிலே மாறாத பூவாசம்
பூத்த குறுநகையில் அன்பின் வாசம்
எண் சாண் அழகில் எத்தனை பூ வாசம்
கன்னியோ அழகில் வண்ணப் பூச்சரம்

மையளாவிய விழிகளோ குவளை
நெய்தடவிய பூங்குழலில் வாசமல்லிகை
முறுவலோ முல்லை-
மென்முலைகளோ பங்கய முகைகள்

செண்பக மூக்கில் சிவப்பு மூக்குத்தி
குமுதவாய் சிந்தும் அமுத மொழி
வளையாடும் கைகளோ காந்தல்-இளையவள்
நெஞ்சிலோ என்னை ஆளும் காதல்

கண்பார்த்து நெஞ்செழுதிய காவியம்
மண்பார்த்து நாணிய மங்கையோ பொன் ஓவியம்
விழிகளால் காதல் பொழியும் தேன் மழை
என்னைக் கவிஞனாக்கிய பூமழை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-08-10-2023

# காதல் பூங்காற்று

எங்கு பார்த்தாலும் உன் பூமுகம், என் மனதினிலோ
பொன்மேனியின் பூமணம், கண்களிலோ உன்னைக்
காணாத ஏக்கம், கவி நெஞ்சினிலோ
சுனாமியாய் சோகத்தின் தாக்கம்

என் இரவுகளிலோ
உன் கனவுகளின் வண்ண ஊர்வலம்
என் இதயத்திலோ காதலின் பூபாளம்

உன் பூவிழிகளுக்குள் மலரும் என்
பொன் உலகம், ஒரு உன் புன்னகைக்காய்
துடிக்கும் என் பூ இதயம்

உன் ஒரு பார்வையால் மலரும்
என் இதயம், என் புன்னகையை,
பூவாய் சூடிடும் உன் இதயம்

உன் தேன்மொழிகள் கவிதையாக
உன் பூவிழிப்பார்வை தென்றலாக
காதலாகிப் பூத்ததும் உன்னால்
கவிஞனாகி மலர்ந்ததும் உன்னால்

உன்னைக் காணாமல் கவிதையும் வாடுதடி
என் கனவுகளும் கலையுதடி

நான் தேடும் பூங்குயிலும் இவளோ
என் இதயம் பாடும் பூபாளமும் இவளிற்கோ?
கண்வழி நுழைந்து-நெஞ்சினில் கவிதையாய் பூத்த
காதல் விதை இவள்தானா?

என் வானிற்கு நீதான் நிலவு என்
விழிகளுக்கு நீதான் பேரழகு
என் கவிதைகளுக்கு நீதான் தேன் ஊற்று
என் இதயத்தில் வீசுவதும் உன் காதல் பூங்காற்று

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-30-09-2023*

# காதலுக்குத் தோல்வியில்லை

காதலன் நான் தோற்றாலும் காதல் தோற்பதில்லை-காதலே
என் இதயத்திலிருந்து உன்னை இறக்கிவைக்க மனமில்லை,
இமயச் சோகத்தை தாங்கிட என் இதயத்திற்கு வலுவில்லை
காதல் சோகத்தை இறக்கி வைக்க சுமைதாங்கியுமில்லை





இறக்கி வைக்கப் பூவே, என் நெஞ்சுக்கு நீ பாரமில்லை
சுகமான சுமையடி-வலிக்குதென்று தூக்கி எறிய
காதலே நீ முள்ளல்ல, வண்ண மலரடி, வாசமலரே
உன் பூ மடியில்தான் என் சொர்க்கமடி

காதல் ரோஜாவே, காலமெல்லாம் என் நெஞ்சில் நீ வாழ
கண்ணீர் ஊற்றி வளர்ப்பேன், காதல் முள்ளா?, மலரா? காலம்
சொல்லும் வரை, தந்தி அறுந்த என் இதயவீணயில் முகாரியடி-
தவிக்கும் நெஞ்சுக்குள் பொன்மீனாய் நீந்தும் உன் இதயமடி

கண்பார்த்து நெஞ்செழுத காவியமாய்க் காதலை
கண்களால் என் நெஞ்சில் விதைத்தாய், கண்ணீர் மழையில்
நனைந்து இமயச் சோகத்தை அறுவடையாக்கி-நித்தம்
உன்னை நினைந்தழ பார்வதி நீ வரம் தந்தாய் ?

என் வானில் அமாவாசை என்றாலும் என்றும்
என் காதல் நிலவு நீயடி, உனக்காய் காத்திருத்தலும்
நீ வரும் வழி பார்த்திருத்தலும், காதல் தவமடி



கடந்து போகையில்-கண்களால் உன்னைத் தழுவுகிறேன்,
அறிந்தும் அறியாதவளாய் நீ, தேவி பக்தனாய் நீ நடந்த மண்ணை
திருமண்ணாய் பூசுகின்றேன், தேவதையே பார்க்க மறுக்கின்றாய்
உன் உயிர் மூச்சால் நாளும் வாழும் உன் தேவதாஸ்
நானென்று தெரிந்தும், தெரியாதவளாய் நடிக்கின்றாய்-ஏனடி?

உன் காலடி மண்ணில் என் காதலை விதைத்து காத்திருப்பேன்,
காதலே நீ முளைக்கும்வரை, என் காதலுக்கு இறப்பில்லையடி
உன் கண்படு தூரத்தில் நானிருந்தும்-காதலே, உன் நெஞ்சின்
குவித்தூரத்துக்கப்பால் என் விம்பம்-இதயம் வலிக்குதடி

ஒரு விழியாள் நோய் தந்து, மறுவிழியாள் நோய் தணித்தாள்,
குறுவிழியாள் மொழியில் காதல், குறுநகையில் ஊடல்,
தேவதாஸ் நெஞ்சிலே எல்லாம் மாயைதானா பாடல்



கடந்து போகையில், உன் வாசத்தை முகர்ந்து சிலிர்க்கும் என் உயிர்
என்னை நீ மறந்து போகையில் நாளும் மரிக்குதடி, பொட்டாய் ஏனும்
இட்டுக் கொள்ளடி என் நேசம் மலரட்டும், ஒரு மல்லிகை மொட்டாய்
ஏனும் சூடிக்கொள்ளடி என் இதயம் குளிரட்டும்

கண்ணீர் மலர்களால் மாலையிட்டேன் புழுதியில் வீசினாய்,
கவிதையால் காதல் தூது விட்டேன்
காகிதக் கப்பல் செய்து மழை நீரில் ஓடவிட்டாய்
நெஞ்சமெங்கும் காதல் காயங்களடி

அம்பு பட்ட கிளியாய் அஞ்சுகமே துடிக்கும் என் இதய ஒலி-
இன்னுமா உனக்கு கேட்கவில்லை, உன் கூந்தலுக்கு மலரானாள்
நாளும் மலர்ந்திருப்பேன், உன் செம்பஞ்சு கால்களுக்கு
கொலுசானால், உன்னோடு இசைபாடி நடந்திருப்பேன்

உன் நெற்றிக்கு பொட்டானால் குதூகலித்திருப்பேன்
உன் செவ்வாய் இதழ்களுக்கு சுவையானால்
அமுதாய் என்னைத் தந்திருப்பேன்- உன் இதயத்தில்
இருப்பது நான் என்றால் என்னுயிரை ஈந்திருப்பேன்

எல்லாம் கேட்டவளே-ஏனடி என் இதயத்தை மட்டும்
கேட்க மறந்தாய், எல்லாம் கொடுத்தேன்-நீ மறுக்கவில்லை
என்னைக் கொடுத்தேன் ஏனடி மறுமொழி சொல்லவில்லை,
மறுப்பும் சொல்லவில்லை இதயம் வலிக்குதடி



புண்பட்ட காயத்துக்கு மருந்து உண்டு, கண்பட்டால்
கண்ணூறு கழிக்கவும் வழியுண்டு, கன்னி கண்பட்டு
காதலாகிப் புண்பட்ட நெஞ்சுக்கு ஏதடி மருந்து,
காதலே நீதான் என்தன் காதலுக்கு அருமருந்து

வண்டுபடு கூந்தலில் ஒரு மலராக வாழ வரம் கொடு
கண்படும் அழகை கவிஞனாய் பாட வரம் கொடு
காதல் பிணி தீர்க்க தேனிதழ்களால் அமுது கொடு
என் தேவி நீ எனக் காதல் தேவதையே வரம் கொடு

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-30-09-2023*

# மணமில்லாத மண வாழ்வு

இன்பத்திலும், துன்பத்திலும் நோயிலும், நலத்திலும்,
வறுமையிலும், வளத்திலும் ஒருவரை ஒருவர் பிரியோம்
அன்பு செய்து வாழ்வோம் என்றே வாக்குறுதி அளித்து
மணவாழ்வில் இணைந்தவரும் பின்னாளில் மணமில்லாத
மணவாழ்வால் மனம் கசந்து பிரிந்தார்



காதலித்து மணந்தவரும் காலம் செல்ல-மணவாழ்வும்
புளிக்கும் திராட்சை என்றோ மனம் கசந்தார்?
ஆசை அறுபது, மோகம் முப்பது நாளானது
வாழ்வோ புதுமணத் தம்பதிகளுக்கு எரி நரகானது.

அண்ணலும் நோக்க, அவளும் நோக்க, கண்களால் நெஞ்சில்
பூத்த காதல், அசோக வனமிருந்து வாடிய சீதை-பின்னாளில்
சோகவனமாய் வாழ்வு மாறிட-கொண்டவனை
நிராகரித்த லவ, குசன்களின் காவிய அம்மை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-30-09-2023

# மனைவி அமைவதெல்லாம்

மோகனம் ஒலிக்கும் ஆனந்த இல்லம் -மௌன ராகத்தில்
மூழ்கிக் கிடந்திட, கோலமின்றி வாசல் மூளியாய்க் கிடந்தது
கோலமயில் ஆடிய வீடு வெறிச்சோடிக் கிடந்திட
என் காதல் தேவதை இல்லாத ஆலயம் பாழடைந்துபோனது





பிரிவின் பெருவலி இதயத்தை வாட்டிட
உறவு சொன்ன சோடிக்குயில் கண் மறைந்திட
மழையில்லாப் பயிராய் வாடும் மனம்
பட்ட மரமாய் குமுறும் தினம்

சோடிக் குயில்கள் பாடிய குயில் தோப்பில்
ஒற்றைக் குயிலின் கானம், ஒன்றாய் உறங்கிய
பூ மஞ்சம் தீயாய் எரிக்க-காவிய
வாழ்வோ ஈரவிழிக் காவியமான தினம்

கால் கொலுசு குலுங்க, கைவளையல்கள் சினுங்க
மையிட்ட விழிகளும், மது மலர்க் குழலும், பொட்டு வைத்த
நுதலும், புன்னகை தாங்கிய செவ்விதழும், பூபாளமாய் என்னை
எழுப்பிய காலம், கனவாய், பழங்கதையாய் கலைந்துபோனது

சூடான தேனீர், ஆறுமுன் பருகுங்கள்
சொல்லும் தேவதை மறைந்த மாயம் என்னே?
புன்னகை பூத்த பூங்கொடி-சுவரில்
மாலையணிந்த சித்திரமாய் மாறியதென்ன?





கூறை சலசலக்க, கொலுசு குதூகலிக்க
மண் பார்த்து மணமேடை வந்த நங்கை
மாலையிட்ட நாள் முதல் என் வாழ்வைத்
திருநாளாய் மாற்றிய தேவகங்கை

நாளும் பூபாளம், மணவாழ்வோ மணக்கும்
பரிமளம், என் வானில் நாளும் தேன் நிலவு-
என்னைக் கவிஞனாக்கிய பெண்ணிலவு

பொன்னில் வார்த்த பொற்சிலை,
அன்பை அள்ளிப் பொழியும் பூ மழை,
காதற் கடலின் வற்றாத தேனலை-என் வானில்
ஒளிர்ந்த தீபம்-என் மூச்சில் கலந்த நறுமணம்

மழலையாய் என்னைத் தாலாட்டிய தாய்மை
கண்ணீர் மழைக் காட்டில் நான் தவிக்க
இன்று கலைந்த கனவான அம்மை

என் வாழ்வில் வேரும், விழுதுமாய் நின்று நிழல் தந்த
ஆலும் விழுந்ததோ? காமதேனுவும், கற்பகதருவுமான
காதல் தேவதை என்னைப் பிரிந்ததே?

இன்பத்திலும், துன்பத்திலும் மாறாத புன்சிரிப்பு
ஸ்ரீராமனே உலகம் எனும் சீதையின் நினைப்பு
தாய்போல் என்னைச் சீராட்டி-தாரமாய்
காதல் இன்பம் தந்த சீமாட்டி

கோலமிட்ட வாயில் சிரிக்க-குமுத வாயில் தேனமுதம்
இனிக்க- அறுசுவை அன்னமும் அமுதாய் சுவைக்க-
மலைத்தேனாய் காதல் இனிக்க, தன்னைத் தேய்த்து
மணந்த சந்தனம், குத்து விளக்கான பெண்மை
வீட்டைக் கோயிலாக்கிய தாய்மை

புன்னகை அணிந்தவள் பொன் நகை கேட்டதில்லை
கண்ணால் காதல் சொல்லும் தேவதை, மஞ்சளும், குங்குமமும்,
மலர்களும் நிலைக்க வரம் கேட்ட மங்கை -என் வாழ்வை
வளமாக்கத், தன் வாழ்வைத் தாயாய், தாரமாய்த் தவமாக்கி ,
நான் தவிக்க, என்னைப் பிரிந்து வான் வீடு போன நங்கை

கங்கையை என் கண்களில் வைத்தாள்
காங்கையை நெஞ்சில் வைத்தாள்
ஒற்றைக்குயிலாய் மனம் கரைய
என் சோடிக்குயில் வானகம் போனாள்

நூலறுந்த காற்றாடி புழுதியில் தவிக்க, தந்தி அறுந்த வீணை
மூலையில் கிடக்க , சோகக் கடலில் மூழ்கிடும் என் படகு
சீதையை இழந்த இராமனாய் என்தன் உலகு

நோயுற்றுப் படுத்ததில்லை, நொந்து சோகம் சொன்னதில்லை
வீடு பெருக்கி, துணி துவைத்து, அன்னமிட்டு அயராது உழைத்த
அன்புச் சேவகி, ஒரு வேலையும் என்னைச் செய்ய விட்டதில்லை,

அவள் சேலை நான் துவைக்கவில்லை, அவள் பணியை
நான் பகிரவில்லை புன்னகைப் பூக்களால் தன்னை
அலங்கரிக்கும் பூவை, என் சிலுவையைச் சுமந்த குலமகள் ராதை,

என்றும் நான் உறங்குமுன் உறங்காதவள்  தனியனாய்
நான் வாட உறங்கிடப்போன காதலின் கீதை

ஒன்றாய் உலாவிய பல பொழுதுகளில் அவள் அழகை
கவிதையாய் வர்ணிக்க, காதலாகி நாணிய மங்கை
கரை மீறாத அலைபோல்-ஓயாது என்னைத்
தழுவிடும் காதல் கங்கை- ஓய்ந்துபோனது



விழிகள் சிவந்து, விம்மிடும் மனம் கேவிக் கதறிட
விடியல் கானாத வானாய் என் உலகு மாறிட
தாரமே, தாயாய் நின்ற காலம் கனவாய் கலைந்ததென்ன
இறை தந்த வரம் சாபமாய் மாறியதென்ன?

தூசு தட்டி வீட்டை தூய்மைப்படுத்த. உயரத்தில்
தொங்கிய  ஒட்டடையைத் தட்ட-துள்ளிப்
பாயந்தவளை மெல்ல நான் தூக்கிப் பிடிக்க-
வெட்கத்தால் நாணி நெஞ்சில் முகம் புதைத்த மங்கை

கண்களில் தூசு விழும் செல்லமாய்ச் சொல்லி
முந்தனையால் என் கண்களைக் காத்த காதல் மங்கை
கட்டியணைக்க வெட்கத்தால் கண்களை மூடி
காதலால் என்னைக் கவிஞனாக்கிய தேவ கங்கை

இடிதாங்கியும், சுமைதாங்கியுமாய் மாறி எனைக் காத்து
என் வாழ்வைச் சொர்க்கமாக்கிய பெண்மை
தாயும், தாரமுமாய் அன்பைப் பொழிந்த தாய்மை



கண்ணாய் என்னைக் காத்த இமைகள் மூடிட
இடியும், இமயப் பாரமும் ஒன்றாய் இதயத்தை தாக்கிட
சிதைந்துபோன என்தன் உலகு-நடைப்பிணமாய் என்தன் வாழ்வு

பௌர்ணமியாய் ஒளிர்ந்த என் நிலவு, அமாவாசை இருளில்
மறைந்து போனது, நிலவில்லாத வானாய் நீளும் இரவு
விடியல் காணாத பொழுதாய் என்தன் உலகு

சமையலறையில் நான் துணைக்கு வர, வெட்கப்பட்டு,
வேண்டாம் இது என் வேலை , மரக்கறி நறுக்கிக் கொடுத்து-
தேங்காய் துருவிக் களிக்க , அன்பினால் கனிந்த நங்கை
கரங்களை முத்தமிட்டு நன்றி சொன்ன காதல் கங்கை

உள்ளம் நொருங்கிட விழிகளிலே காயாத ஈரம்
இதயத்திலே ஓயாது கசியும் உதிரம்

என் மொழிகளிலே அழுகையின் அலங்கோலம்
என் கவிதையிலே முகாரியின் ஆலாபனம்

நிலத்தில் விழுந்த மீனாய் நெஞ்சம் துடிக்க, நிலவில்லாத
வானாய் உள்ளம் கறுக்க, என் ஊனில் ஊனானவள்,
என் என்பில் என்பானவள், என்னைப் பிரிந்ததென்ன?
இறைவா நீ தந்த தண்டனைதான் என்ன?

மண்ணில் உடலைப் புதைத்து-மனதில்
நினைவுகளை விதைத்து-கண்ணீரால் நீர் பாய்ச்சி
கவிதைப் பூக்களைத் தூவி-கண்மணியே உறங்கு
காதலன் நான் பாடும் தாலாட்டு

உள்ளம் கோயிலாக என் நெஞ்சில்
குடிவந்த காதல் தேவதை
இதயம் தாஜ்மஹாலாக -நினைவில்
வாழும் காதல் கவிதை

நூற்காத தவத்திற்கு இறை தந்த காதல் வரம்
ஆண்டாளாய் தன்னைச் சூடிக் தந்த வண்ணப் பூச்சரம்
மாலை வருமுன் உதிர்ந்த மாயம்தான் என்ன
வாழ்வே மாயம் மாறாத துயரமானதென்ன?

என்னைக் கண்டதும் நர்த்தனமாடும் குவளை விழிகள்
உறங்கிப்போயின-நல் வரவு சொல்லப்-பூத்தாடும்
பூங்குழலி மல்லிகை வாடிப்போனதென்ன?
ஆனந்தக் கூத்தாடும் என் மனம் நொருங்கியதுமென்ன?

பூத்த முறுவலில் முத்துக்கள் ஒளிரும்
சூடிய மல்லிகையின் வாசம் நெஞ்சை அள்ளும்
பார்க்கத் திகட்டாத அழகில்-மனம்
கவஞனாய் மாறும்-வாழ்வோ கவிதையாய் மலரும்

கலைந்த வண்ணக் கனவான என் வாழ்வு
நூலறுந்த காற்றாடியாய் தவிக்கும் மனசு
நெஞ்சில் ஓயாத சோகத்தின் அலைகள்
என் கவிதைகளில் முகாரியின் ஒலிகள்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-30-09-2023*

















அன்னையின் நெஞ்சமாய்
அன்பை பொழியும் இனிய ஸ்நேகிதிக்கு,
வாழும் நாளெல்லாம் மங்களம் பொங்க,
மஞ்சளும், குங்குமமும் மலர்களும்
வாழ்வில் என்றும் நிலைக்க
இல்லறம் நல்லறமாய் சிறக்க
வாசமுல்லையாய் மணக்க
அன்பு நெஞ்சம் பூவனமாய் சிரிக்க
பல்லாண்டு, ஆனந்த சந்தோஷத்தோடு வாழ
கானக்குயிலாய் கணவனோடு பாடி மகிழ-தாயே
என் பிறந்த நாள் நல்வாழ்த்துக்கள்

*I wish you all the joy that
you can wish on this day.
God bless you all.
I sincerely thank you for your worthy
friendship, Amma*
loving friend
Pax Ravichandra

# முரண்பாடு

-----------------------------------

காதலில் விழுந்தபோது-கற்பனையில் தாஜ்மஹால் கட்டும்-
ஷாஜகான்கள், மும்தாஜ்களை மணம் முடிக்கும்போது
ஏழை மாமனிடம்-நிஜ-தாஜ்மஹாலையே
சீதனமாய்க் கேட்கும் வஞ்சகர்கள்

சீதன வில்லை உடைத்து சீர் வரிசை வேண்டாமல்
மாலையிட "ஏழை இராமன்" வந்தாலும்-
"ராஜா ராமன்களை"
மாலையிடத்தேடி மாப்பிள்ளைச் சந்தைகளில்
சீதனத்தால் வாங்கும் புதிய சீதைகள்

"தமயந்திகளின் சுயம்வரத்தில்-
" அனுமதி "இளவரசர்களுக்கு மட்டும்"
கட்டாய அறிவுறுத்தலானது

"மாதவிகளின்" வீட்டு வாசல்களில்-
"மீண்டும் வருக"
"அழைப்பிதழானது"

நளாயினி வீட்டு முற்றத்தில் நலிந்த கூடைகள்
கௌதம முனியின் தோட்டத்தில் , அகலிகைச் சிற்பங்கள்
விடியல் அறியாத முனி-கட்டியவள்
விரகதாபம் புரியாத அண்ணகனோ பிணி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-05-10-2023

# முதல் முத்தம்

---

அழகின் அற்புதமோ?-ஆயிரம் காலத் தவத்தின்
பெருவரமோ? கற்புடை மாதரின் சீதனமோ
கண் கண்ட பேரழகுக் கன்னி ? என்
நெஞ்சை காதலில் வீழ்த்திய அங்கயற்கன்னி



கண்டதும் நெஞ்சுக்குள்-காதல் பூ பூக்க
ஜோடி கண்ட காதல் குயிலாய் இதயம் கூவிக்களிக்க
வண்டு படு கூந்தலில் ஆயிரம் மலர் வாசம்
கண்படும் அழகில்-நெஞ்சம் காதல் வசப்பட்ட நேரம்

மணி விழிகளில் மையல் ஆட, கனிமொழிகளில் கோகிலம் இசைபாட,
தையலாள் முகத்தில் திங்கள் மலர்ந்தாட, செவ்வாய் இதழ்களில்
குறுநகை பூத்தாட, மன்மத ராகம் பாடும் காமனின் கவியரங்கமா?
காமசூத்திரம் படிக்கும் காதலின் கலையரங்கமா? கன்னி?

முதல் காதலும் அவளாக-தந்த முதல் முத்தமும் அமுதாக
கோவைச் செவ்வாயில் குங்குமப் பூ பூத்தாட-பொன்னுடலில்
மல்லிகை மணம் வீச, மென்முலைகள் பூரித்துக் கூத்தாட
அள்ளி அணைத்த கரங்களுக்குள் அணையாத காதல் தீ



விழி சிவக்க, முல்லைக்கொடி என்னைப் படர்ந்து களிக்க,
இணைந்த இதழ்கள் மலர்ந்து ஆனந்தக் கூத்தாட
இடை தழுவி மெய் முகர்ந்து, இசைந்தாடி
அமுதம் உண்டு காதலைக் கொண்டாடிய நெஞ்சம்

செவ்வாய் சிவந்து, பொன்மேனி கனிந்து, நாணம் பூமேனியில்
கோலமிட, மோக மழையில் நனைந்து, முத்தக் கடலில் மூழ்கி,
ரதி மன்மதனாய் காதல் அமுதம் கடைந்து-வள்ளுவன்,
வாசுகியாய் காமத்துப்பால் சுவைத்த காதலர் யாம்

அழகு ததும்பும் தேவதை, அமுத சுரபியை செவ்வாயில் ஏந்திய
காதல் மணிமேகலை, அள்ளிப் பருகியும் வற்றாத காதல்
தேன் சுனை-கள்வடியும். இதழ் கள் கட்டிய காதல் அணை
அணைத்து, காதல் தீ வளர்த்து மோகனம் இசைத்த இன்ப வீணை

முத்தமோ வற்றாத அமுதாய் காதற் காமத்தால் பொங்கிட
காமனை வெல்ல கன்னி என்னை கனிரசம் பருகிட அழைத்திட
என் விடாய் தணிய-உன் விடாய் தீரும், காதலின் தத்துவம் புரிந்திட
காமன் கணைபட்ட நெஞ்சம் கன்னி இதழ்பட்டு குணமானதே

கன்னியும் காளையும் கடைந்த பாற்கடல்
அமுதாய் கிடைத்த முதல் முத்தம்
காதல் பிணி தீர கன்னி தந்த ஔடதம்.

இதழோடு இதழ் உரச-இன்பத்தேன் பொங்க, இரவே
விடியாதே, கதிரே மலராதே என, இரு மனமும் கெஞ்ச
இரு மனங்கலந்த இன்பச் சங்கமம்
விடியல் காணாத முத்தத்தின் முதல் அனுபவம்.



செவ்விதழ் சிவப்போ விழிகளில், மலர்க்கண்
வெளுப்போ இதழ்களில், காயும் நிலவோ வானில்
கனிந்த நிலவோ மார்பில், காலம் கடந்த நிலையில்
கனிந்த காதலில் மலர்ந்த பரவசம் மனங்களில்

என் இதழ்களில் அவள் இதழ் கள்ளின் இனிப்பு
இன்று இதயமோ ஏக்கத்தில் நிலைப்பு?
விழிகளில் சோகத்தின் சிவப்பு.
காதல் எனக்கு ஏனோ சாபமான கசப்பு

கனிந்த அவள் இதழ்களின் இன்ப உணர்வு
இன்றும் இதழ்களில் இனிக்கும் சுவையானது
காதலான நெஞ்சில்-கன்னியின் இதயம்
எண்ணித் துடிக்க என் சொந்தமானது

ஆசை, மோகம் கடந்து காதல் தவமானது, கன்னி மனதோ
வேண்டும் வரமானது, அன்பில் நிலைத்து
வள்ளுவன், வாசுகியாய் இன்புற, இல்லறம் மோட்சமானது
இருவரல்ல ஒருவராகிட இறைவன் தந்த வீடு பேறானது

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-05-10-2023*

# நடத்தல்



உள்ளுணர்வின் வளர்ச்சிப் படியில் மனிதன்
உயர்ந்தால் தெய்வம்-தாழ்ந்தால் விலங்கு
வளர்ச்சியின் விதியும், மாறாத
இலக்ககணமுமாய் மனித பரிணாமம்




தவழ்ந்து, நடைபயின்று, நிமிர்ந்து நடத்தல்
வளர்ச்சி , கூனிக் கோல் கொண்டு நடத்தல்
முதுமையில் வரும் தளர்ச்சி.

குழந்தைப் பருவத்தில் தவழ்தலே மாறாத விதி-
நன்றியுள்ள நாய் சொன்னது அர்த்தமுள்ளது.
வாழ்வு முழுதும் மனிதன் தவழ்ந்தல்- அவனோ முடவன்-
உள்ளுணர்வில் விழித்தால் அவனும் ஒரு புத்தன்.

தவழ்வதுவோ, நிற்பதுவோ, நடப்பதுவோ
எல்லாம் உள்ளுணர்வின் சொப்பனந்தானோ
பல தோற்ற மயங்கங்களோ?




குழந்தை, பிரமசாரி, சம்சாரி, சந்நியாசி,
வாழ்வின் நிலைகள்-சத்தியத் தேடல்
தன்னுள் தன்னைக் கடந்த தன்னை அறியும்
மெய்ஞானம்- அதுவே நிர்வானம்.

குழந்தையில் தவழ்தல் ஆரோக்கியம்-வளர்ந்தவன்
தவழ்ந்தால்-ரோகம், நிமிர்ந்து நடந்தும்
உள்ளுணர்வில் தவழ்தல் நடைப்பிணவாழ்வு-

மனிதா நீயும் தெய்வம்
அறிந்து விழித்தால் அனைத்தும் தெய்வீகம்
வாழ்வோ சச்சித் ஆனந்தம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-26-08-2023

# நண்பன்

---

புல்லாய் கிடந்தேன், பனித்துளியாய் அணைத்தாய்
பூவாய் மலர்ந்தேன் தேனாய் கலந்தாய்
வானாய் விரிந்தேன், வெண்ணிலவாய் ஒளிர்ந்தாய்
வான்மழையாய் விழுந்தேன் மண்ணாய் நெகிழ்ந்தாய்

நதியாய் ஓடினேன், கடலாய் அணைத்தாய்
பாலையாய் வாடினேன் பூந்தென்றலாய் வந்தாய்-.
நண்பா நீயென்ன தேவனா? -இல்லை உன் நட்பு
ஏழை எனக்கு-இறையீந்த பெருங்கொடையா?

துன்பம் வந்தபோதெல்லாம்-துணையாய் நின்று
இருகரத்தால் அணைத்து என்னைக் காத்தாய்
தெய்வம் தந்த துணையே-உயிருள்ளவரை-என் நெஞ்சம்
உன்னை மறவாது, உன் புகழ் பாட மறவாது

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-06-10-2023

# நட்பின் பெருமை

--------------------------------

பட்டமரம் துளிர்க்காது, சுட்டமண் ஒட்டாது
வெந்தவித்து முளைக்காது-கற்பில்லா
நட்பும் காலமெல்லாம் நிலைக்காது.

மூப்பு, பிணி, சாவில்லாத நட்பிற்கும் கற்புண்டு ,
பிடி அவலும் நட்பால் அருஞ்சுவையானது
குசேலனை வருத்திய வறுமைமையும்-கண்ணன்
நட்பால் நொடியில் குணமானது

தேரோட்டி மகனும் முடி சூடி நாடாள
சரியாசனம் தந்தது-துரியோதனன் நட்பு
தன்னுயிரையும் ஈந்து மகிழ்ந்தது
மாவீரன் கர்ணனின் நட்பு

நட்பிலோ உயர்வு தாழ்வு இல்லை
ஸ்ரீராமனும், குகனும் குலாவி மகிழத் தடையில்லை
மன்னனும், புலவனும் கொண்ட நட்பிற்கு-மாண்பாய்
கோப்பெருஞ்சோழன்-பிசிராந்தையர்

மரணமும் நட்பைப் பிரிக்குமோ என்றேர்
மன்னன் மடிந்தது கேட்டு-புலவரும்
வடக்கிருந்து உயிர் நீத்து காலனைப் பரிகாசித்தார்

பாரியும், கபிலரும் பூண்ட நட்பு-மக்கள்
அங்கவை, சங்கவையை வாழவைக்க
ஔவையும் , அதியமானும் கொண்ட நட்பு
அரிய நெல்லிக்கனியை ஈந்து ஔவையைக் காக்க
நட்பினும் உயரியது பூவலகில் ஏது.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-06-10-2023

# நட்பூ

-----------------------------------

உன் குரல்  கேட்கும்போதெல்லாம்-நண்பா
என்னிதயத்திலோ தேன்மழை
உன் மடல் காணும்போதெல்லாம்
என் விழிகளிலோ ஆனந்தப் பூமழை

வண்ணப் பூவாய் என்னுள் மலர்ந்து-சுவாசக்காற்றாய்
என்னில் கலந்து-வாழ்வில் வசந்தம் தந்த இனிய உறவே
ஊமைக்குயிலும் உன் நட்பால் கவிபாடும் கோகிலமானது
ஊனமுற்ற கலாபமயிலும்-உன்னால் ஆனந்தக் கூத்தாடுது

கண்பார்த்து நெஞ்செழுதிய கல்லூரி உறவே
மண்பார்த்து விண்பூக்கும் ஒளிமலர்களும்
விண்பார்த்து மண் பூக்கும் வாசமலர்களும் வாழும்வரை
இதயம் பூத்த நம் நட்போ வாடாது, உதிராது, வாசமிழக்காது
உயிருள்ளவரை, ஒருபோதும் உன்னை மறவாது

கண்வழி நுழைந்து என நெஞ்சில் கலந்திட்ட நட்புறவே
மண்ணோக்கி என் தேகம் வாடி வீழ்ந்தாலும்
விண்ணேகும் என் உயிரில் -உன் நட்பு
பூவாசம்போல்  மணக்கும் பூந்தேனாய் இனிக்கும்.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-06-10-2023

# நீலோற்பலம்

---



வான் நீலமெல்லாம், வண்ண நிலா ஆடையாய்ச் சூடிக்கொள்ள
தேன் சுவையெல்லாம் செவ்விதழ்களில் பொங்கி எழ
கார் குழல் மலர் மாலையாய் மார்பில் ஆட
வாரிக்கொள் என்னை வரிந்து அணைத்துக் கொல்
பூ மாலையாய் சூடிக்கொள் என்னும் வாடாத கன்னியழகு

பொன்னிதழ் விரித்த புன்னகையில் ஒளிரும் கொற்கை
முத்துக்கள், முத்தம் குளித்து முத்தெடு எனச் சொல்ல
பூரித்த தொடைகளும், நாணிய விழிகளும் காதலைச் சொல்ல,
அழகால் பிரம்மன் தாளித்த பொற்சித்திரம், கனவிலும்
என்னைக் கொல்லும் காமனின் மன்மத அஸ்திரம்

நான் சூட மலர்ந்த நீலோற்பலம் நெஞ்சுக்குள் மலர்ந்த
காதல் உற்சவம்-பூ விழிகள் மூடி, பூவாசம் வீசி
நேசத்தால் பூங்கரம் உயர்த்தி, பாசத்தோடு அணை,
எரிக்கும் காதல் தீயை அணை, மோகனம் இசைக்க,
உன் வீணை என்னை மீட்டு காதலால் என்னைத் தாலாட்டு

என் கார்குழல் சூட வாச மலராய் மாறு
என் பூவிழி பூக்க முழுநிலவாய்த் தோன்று
என் பொன்னுடல் சிலிர்க்க தென்றலாய் தழுவு
என் செவ்விதழ் வெளுக்க முத்தமழை பொழி

காதலால் என்னைத் தாலாட்டு-காதல்
கவிதைகளால் என்னைப் புகழ்ந்தேற்று
வண்ண மலர்களால் என்னை அலங்கரித்து
வாச மலராய் என்னை சூடிக்கொள்

காதலாகி என்னைத் தாலாட்டு
கவிஞனாகி என்னைப் பாராட்டு
மரகத வீணை என்னை காதல் சுரம் கூட்டி
விடியும் வரை மதன ராகத்தை அரங்கேற்று

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
Pax Ravichandra-06-10-2023

# நெஞ்சுக்குள் பெய்யும் பூமழை

என் காதல் வானத்துப் பௌர்ணமி நீயடி
நாளும் என் நெஞ்சுக்குள் பெய்யும் பூமழையும்
உன் காதல்தானடி-என் சுவாசக் காற்று நீயடி
நீயில்லையேல் என் வாழ்வுக்குப் பொருள் ஏதடி

உன் பூவிழிகளோ காதல் பூவனம்
உன் செவ்வாயிதழ்களிலோ தேனமுதம்
உன் பொன்மேனியிலோ பூவாசம்-
என் இதயமோ காதலே உன் வசம்

முத்தப்பூக்கள் சொரியும் செவ்வாயிதழ்கள்
தத்தும் கிளிபோல் காதல் கதை பேசும்
அள்ளியணைக்க நாணிச் சிவக்கும் ஆனிப்பொன்மேனி
என் நெஞ்சில் காதல் முரசு கொட்டும்

உன் குவளை விழிகளில் காதல் தேன்
குமுதவாயிலோ அமுதச் சுவை-என் விழிகளுக்கு
நீயோ அறுசுவையிலும் பெருவிருந்து
உன் மொழிகளிலோ பிள்ளைக் கனியமுது

கொவ்வையிதழ்களுக்குள் கொட்டிகிடக்கும் அமுதை
முத்தங்களால் அள்ளிப் பருகவோ, கட்டழகு மேனி
நாணச் சிவக்க, கட்டி அணைத்து காதல் தீ வளர்க்கவா?
காமனுக்கு காதல் விருந்து படைக்கவா?

கொட்டு மௌம் கொட்டி, வெண் சங்குக் கழுத்தில்
திருமாங்கல்யம் பூட்டி-மணமகளாய் சொந்தம்
கொண்டாடவோ-திருமகளோ? கலைமகளோ, மலைமகளோ
தேவி எனப், பள்ளியறைப் பாடம் படித்து அறியவோ?

பாற்கடலே உன்னோடு பள்ளி கொள்ளவோ?
காதற் கடலே கடைந்து முத்தெடுக்கவோ?
தேன்கடலே சுவைத்து மலைத்தேன் என வியக்வோ
அன்புக் கடலே என்னைக் காணிக்கையாக்கி இன்புறவோ?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-07-10-2023*

# பார்த்தேன் இரசித்தேன்

---

பாவையைத் தேடி, கண் பார்வை தவிக்க-பூவையைக் கண்டு
புள்ளிமானாய் நெஞ்சம் துள்ளிக் குதிக்க, பார்வைகள் கலந்து
பரவசத்தில் சங்கமிக்க, கள்ளமாய்த் தழுவி நெஞ்சங்கள் களிக்க
பூ முகத்தில் பூத்த நாணக்கோலம், காதல் பூ பூக்கும் வசந்தகாலம்

அன்ன நடையில் சின்ன இடையும், பூஞ்சடையும் அசைந்தாட,
மல்லிகையின் வாசம் சுவாசத்தை நிறைக்க, இதயம், துடிப்பை
நிறுத்தி ஏக்கம் மொழிந்திட, கொலுசொலியோ ஆறுதல் சொல்லிட
ஆறாக்காதலில் வாடிய மனம் அவளின்றி வாழ்வில்லை உருகிய தினம்



கண்களால் தழுவித் காதலால் தேற்றி
கடந்து போனாள் கனவுக் கன்னி
என் இதயத்தை களவாடிப்போனாள்
அழகிய காதல் திருடி.

முன்னழகோ ஒரு பூவனம், பினனழகோ கார்குழல் அசைய
கலாபமயிலாடும் நந்தவனம், காதல் வசப்பட்ட என் மனமோ
வேடன் வலைப்பட்ட புள்ளினம்.

போனவள் திரும்பி பூவாய் மலர்ந்து, புன்னகை பூத்திட
மைவிழிகள் தழுவி காதல் மொழிந்திட, முக்கனி சுவையை
கண் சுவைத்து, பல் சுவையோ? இவள் பலாச்சுளையோ?
பைந்தமிழ் சுவையோ என வியந்ததுவே!

இக்கனி சுவைக்க என் மனம் ஏங்கிட, காதல் கிளி கொத்தாத
கன்னி-கண்களால் என்னை கொத்திய காதல் பைங்கிளி
தழுவிக் களித்த விழிகள் பிரிய மறுக்க, குவியத்துாரம் கடந்தும்-
நெஞ்சில் குவிந்த கன்னியின் விம்பம்-காதலோ இனிய துன்பம்




ஊடலின் துன்பம் என்னைக் கொல்ல, ஆ நெய்யும்,
பூ நெய்யும் இனிக்க, பூவையின் காதல் நெய்யோ,
நெஞ்சை மயக்க காதல் நோயுற்றேன்.
கன்னி வசப்பட்டேன்

நீர் மொள்ள வந்த மங்கை, என் நெஞ்சை
அள்ளிப் போன காதல் கங்கை
நீராட வந்த வைகை-என்னை
காதல் நதியில் மூழ்கடித்த யமுனை

குடத்தோடும், அசையும் குவி முலையின் அழகோடும்
மனமத விடத்தோடு வந்த கன்னி -கண்களால்
என்னைக் கொத்தி-காதல் அமுது தந்த காமினி

நீராடி, நீர் மொள்ள வந்த கங்கையை-காதலால் என் விழிகள் நீராட்டி
நெஞ்சுக்குள் மொள்ள, பூவாடை வீசி கார்குழல் மேலாடையாய் மாற
மங்கையின் பேரழகில் கங்கையும் துள்ள, துள்ளாத என் மனமும்
துடியிடையாள் அழகில் பூங்கொடியாய் துவண்டதே-தழுவத் துடித்ததே

இவளின்றி வாழ்வில்ல என்று என் மனம் தடுமாற, ஏதுமறியேன்
என்ற பாவம் மதிமுகத்தில் கூத்தாட, கண்ணாளா உந்தன்
காதல் அறிவேன் என்ற பாவம், அன்ன நடையில் நாட்டியமாட
காதல் வாடையில் வாடிய காளை நான்



நடையினில் நாட்டியம்-இடையினில் மின்னல், மொழியினில் தேன்-
முறுவலில் முத்தம், கனவும் நினைவும், காதல் சுரமாய் வாட்ட
பொன்மேனி தழுவாமல்- பெண் இன்பம் அறியாத என்னைப்
பித்தனாகிய காதல் கன்னி

மஞ்சமும் முள்ளாகி, நெஞ்சமும் தனலாகி மனதை வருத்த
மகிழ்ந்த நினைவுகளில்- கனிந்த மனத்தில் காதலின் ஊர்வலம்
கனவிலும் தொடரப், பசி மறந்து, பஞ்சணை துறந்து நாளை வருவாள்
என் நாயகி என்றே கங்கை கரையில் காத்திருக்கும் காதலன் நான்.

வேல்விழியாள் தந்த முத்தங்களாய் நெஞ்சில் இனிக்க,
கள்ளினும் போதை காமத்துப்பால் என்றே மனம் வியக்க,
காதலும் போதை என்ற ஞானம் பிறக்க
என்னை வருத்திடும் காதலை கவிதையால் படைத்தேன்
காதலே உன்னிடம் சொல்ல

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-07-10-2023*

# காதலும், காமமும்

அசோகவனத்தில் சிறையிருந்தும் சீதையின் நெஞ்சம்
சோகவனமாகிச், ஸ்ரீராமனை எண்ணித் தவித்தது -மாமன்னன்
இராவணணன் நெஞ்சமோ மணி மகுடம் மண்ணில் பட
மண்டியிட்டுச், சிறையெடுத்த சீதையிடம் காதல் பிச்சைகாய் உருகியது



ஸ்ரீராமன் கால்பட்டு கல்லான அகலிகையும் அழகிய பெண்ணானாள்
ஸ்ரீராமன் சொல்லடிபட்டு கனிந்த சீதை மனம் கல்லானதே?
இராம இராஜ்சியத்தில்-தனியே வனமேகிய தாயின் மனம்
ராஜாராமனின் நீதி கண்டு வருந்தியது, மனப்பாரமான
உறவைத், தாரமும் உதறி தன்னைப் பிரித்தது

மனதாலும் தீண்டாமல் மாதின் காதலுக்காய் உயிரைக் கொடுத்தான்
ஒருவன், மணாளன் உறவு கொண்டவனோ மாற்றான்
சிறையெடுத்த மங்கையை தீக்குளிக்க ஏவியே தேவியாய் ஏற்றான்

அரக்க நெஞ்சமோ-அணங்கிடம் காதலை இரந்து நின்றது
கர்ப்பிணி துணைவியை காட்டிற்கு ஏவிய காவலன் நெஞ்சமோ,
நீதியை ஏந்தி மகுடத்தை சுமையாய் தாங்கி நின்றது

சிறையெடுத்தும் சீதையின் காதல் மாமன்னன்
இராவணணிற்கு எட்டாக்கனியானது, வனத்திற்கு அனுப்பி
வனிதையும் துறந்தே மன்னவன் வாழ்வும்
மாளிகையிருந்தும் வனத்தில் வாழும் நிலைக்கானது

பிறன்மனையாள் மேல் கொண்ட காதல் பிரம்மனின்
அருள் பெற்றவன் உயிரைக் கொன்றது, ராஜாராமன்
நீதியோ தாயானவள் பூ நெஞ்சை சிதைத்தது

மண்ணில் மகுடம் களைய வீழ்ந்தும் இராவணன்
உள்ளத்தில் காதலின் ஈரம், மகாராணி நிலையிழந்து
வனம்போனவள் நெஞ்சிலோ கணவன்
இழைத்த அநீதியின் கொடும் பாரம்

இன்று போய் நாளை வா என்றவன் ஒரு நாளும்-தன் தேவியை
தேடிப்போகவில்லை, நாளை வந்து போரிலே தோற்று விழ்ந்த வீரன்
நெஞ்சைத் துளாவியும் இராமமபாணம், காதலின் இருப்பிடத்தை காணவில்லை
ஊனிலும் உயிரில் கலந்த காதலாய் அது? காதல் போயின் சாதலாய் இது?

தீக்குளித்த சீதையால்-இராவணன் கற்பும் நிரூபணமானதோ?
கட்டியவனும், கடத்தியவனும் கொண்ட காதலில்
எது உயர்ந்தது? பெண்மைக்கே வெளிச்சமானது

வெள்ளெருக்கஞ் சடைமுடியான் வெற்பெடுத்த திருமேனி மேலும் கீழும்
எள்ளிருக்கும் இடமின்றி உயிரிருக்கும் இடம் நாடி இளைத்தவாறே
கள்ளிருக்கும் மலர்க்கூந்தல் ஜானகியை மனச்சிறையில் கவர்ந்த காதல்
உள்ளிருக்கும் எனக்கருதி உடல் புகுந்து தடவியதே ஒருவன் கை வாளி.
**-கம்பர் பெருமான்**

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
(லோக சமஸ்தா சுகினா பவந்து)
*Pax Ravichandra-08-10-2023*

# உயிரில் கலந்த உறவு

(Rex Marian Pious Joseph- A true Human)

---

இன்று என் இதயமெங்கும் சோக எரிமலையின் கண்விழிப்பு
என் சுவாசத்திலோ கொடும் புயலின் படையெடுப்பு
என்னை பிரிந்து போனதோ-என் உயிரில் கலந்த இனியநட்பு
என் ஆனந்த தேன்சுனையிலோ துயரக் கசப்பின் கைகலப்பு



முக்கனியாய் இனிப்பது உன் நட்பு-அப்பா
முத்தமிழாய் நான் சுவைத்தது உன் உறவு
முப்பாலாய் விரிந்தது உன் அறிவு-விசும்பின்
அப்பாலும் செல்வது உன் அன்பு

நீர் தேடும் கலைமானாய் அன்பைத்தேடி
அலைந்தபோது-நீயோ நீரோடையாய் நின்றாய்-
அறிவைத்தேடும் மாணாக்கனாய் திரிந்தபோது-நீயோ
நூல் நிலையமாய் உன்னையே தந்தாய்

குருவாய்-சகோதரனாய்-இனிய நண்பனாய்
என்னை அன்பு சூர்ந்த இன்ப உறவே,
உனைப் பிரிந்தபின் -என் உலகோ வெறுமையானது
இடிதாங்கி இல்லாத சின்ன இதயத்திற்கு-
உன் இழப்போ பேரிடியானது.

உன் பிரிவால், என் விழியிரண்டில் கண்ணீர்ப்பூக்களின்
வாடாத கண்காட்சி-என் இதய வீணையில்
முகாரி ராகத்தின் ஓயாத அரசாட்சி

உன்னோடு நான் வாழ்ந்தபோது உவகைப் பூவனத்தில்
என் குடியிருப்பு, உன்னைப் பிரிந்தபின் -என நெஞ்சில்
துயரச் சாக்கடலின் படையெடுப்பு

என் அறிவுப்பசி தணித்திட நள்ளிரவிலும் எரிந்த
ஞானவிளக்கு நீ என் அன்புப் பசி ஆற்றிட-என்னையும்
உன் பிள்ளையாய் ஏற்ற அப்பனும் நீ

காலமெல்லாம் முக்கனியாய் இனித்தே-நட்பிற்குப்
புது இலக்கணம் வகுத்தவர்-ஏற்ற பணியெல்லாம்
இறைதொண்டாய் ஆற்றி மகிழ்ந்தவர் என் நண்பர்

இறுதிவரை மெழுகுவர்த்தியாய் தன்னை எரித்து ஒளிர்ந்தவர்
-என்றும் இறைவன் திருவடியை தன் இதயத்தில்
தொழுது மகிழ்ந்தவர், என் அன்பர்- எங்கே என் இறைவா?

சோகப் பண்ணிசைக்கும் ஒற்றைக் குயிலாய்
உன்னைத் தேடியே என் மனம் கரையிது
கண்ணீர்ப் பூத்தொடுக்கும் என் ஈரவிழிகளும்
ஐயா மீண்டும் உன்னைக் காணவே ஏங்குது.




கானப் பண்ணிசைபோல் உன் ஸ்நேகம்
ஞானத் தேடலாய் உன் வாழ்வுப் பயணம்
வான் வெளிபோல் உன் இதயம், என்றும் எல்லோரும்
நலம் வாழ வாழ்திடும் நீயோ ஒரு சூரிய உதயம்.

என்னை பிரிந்து வானகம் நீ போனாலும்
விண்ணேகி என் ஆவி உன்னோடு சேரும்வரை
மண்வாழும் நாளெல்லாம் என் மனம்
இனியவனே, உனை ஒருபோதும் மறவாது.

உத்தமனே என் உயிர்ப்பூவில் தேனினுமினிய நட்பாய்
நிறைந்தவனே, முத்தமிழும் மூப்புற்று தன் இனிமை இழந்தாலும்
முப்பாலும் திரிந்து பொருளிழந்து பொய்த்தாலும்
சித்தம் நினைப்பு செய்கை உள்ளவரை-என்
உள்ளம் ஒருபோதும் உனை மறவாது.

இது ஒரு மகத்தான மனிதருக்கு என் சிறிய அஞ்சலி
அவரோடு வாழ்ந்த காலம் அழகிய பொற்காலம்
எந்த மத அடையாளங்களுமற்ற ஒரு மனித நேயமிக்க
மாமனிதன் என் அன்பர்
அன்புமிக்க அந்த மனிதர் மேல் அன்றும்
இன்றும்- என் மனம் வாஞ்சையாயிருக்கின்றது.

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-08-10-2023*

# சீதை சொல்லிய கீதை



ஏழையின் தோட்டத்தில் பூத்த, எழில்மிகு வண்ண ரோஜா
சூடிக் கொடுத்த ஆண்டாளாய்-"கண்ணணை"
சூடிடக் கனவு கண்ட பூஜா

கம்சனுக்கு ஏழ்மையால் மாலையிட்ட மங்கை
காமவேள்வியில் நாளும் ஆகுதியாகிடும் நங்கை
தேன் நிலவான மணவாழ்வு தேய்பிறையாக
அமாவாசையிலும் காமத்தீனியாகும் மங்கை

மங்கல நாண் சூட சங்குக் கழுத்தை கொடுத்தாள்
குங்குமம்தான் சூட பிறை நுதலையும் அளித்தாள்
மன்னவன் தன் சந்ததி வளர தன்னையுமளித்தாள்
கைத்தலம் பற்றியவன் தெய்வம் என்றே வாழ்வையும்,
உழைப்பையும் தேவி அர்ப்பணித்தே பூஜித்தாள்

பள்ளியறைப் பாடம் -முதலிரவில் பயமும், பரவசமுமாக
நாளும் தொடர்ந்த காதல் காமம், கசப்பும், இனிப்புமாக
கட்டிலில் தினமும் கற்பழிப்பான வாழ்வு
மனம் கசந்திட நாளும் ஒரு சாவு

சுந்தரம் இழந்து கருகிய பூவனம்-காமசூத்திரமோ
கணவன்அறியாத மோகனம், அலுவலகத்திலும்,
அழகை, விழிகளால் துகிலுரியும் துச்சாதனர்-பேருந்திலோ
"உரசல்களால்" காமச்சூடு தணிக்கும் காமுகர்

நாளும் தீக்குளித்தும் வேகாத சீதை-மஞ்சத்தில்
கணவணால் மதுபோதையில் கற்பழிக்கப்படும் பேதை
மாங்கல்யமே தூக்கு கயிறாக, மனமுடைந்த பெண்மை
விவாகரத்து கோரி போர் முரசு கொட்டிய அம்மை

கட்டியவளை கற்பழிக்க
சட்டம் வழங்கிய உரிமம் விவாகம்?
விந்தை நாளும் விதைக்க மனைவியோ
விளைநிலமான காமபோகம்

காதல் காமம் கசந்து வாழ்வு கற்பழிப்பாய் மாறிட
உழைப்பும் ஊதாரியின் மதுவிற்கு பறிபோயிட
நொருங்குண்ட பூமனம் எரிமலையாய் பொங்கிட
பொறுத்தது போதுமென்று கொட்டியது போர் முரசு

காமத்தில் விளைந்த கருவும் சிதைய, காட்டுத் தீயாய்
நாளும் வாட்டிய காமுகன் காமமும் அணைய, ஊனுடல்
கொண்ட உறவை அறுத்து விவாகரத்தான பெண்மை
மாங்கல்ய சிறை மீண்ட தாய்மை

கண்ணீர் திரையிட்ட பூவிழிகளில்
மதுரையை எரித்த கண்ணகியின் செந்தணல்
மாதவியாய் ஆடி வாழ்ந்தவள் சலங்கையில்
கண்ணீர்ப் பரல்களின் பூம்புனல்

கண் அவன் என்ற கணவனோ காமக்குருடன்
பூவான பெண்மைணை போற்றித் துதிக்காது
புழுவாய் அரித்த காமுகன், கலைஞனாய் யாழை
மீட்டாமல், கடி நாயாய் புனையும் வேடுவன்

ஞான வேள்வியில் தன்னை ஆகுதியாக்கி
*புதிய குண்டலகேசியாய்* பூத்த பெண்மை
ஐம்புலனின்பம் கடந்து-பகுத்தறிவுக்கு
மாலையிட்ட ஆண்டாளாய் அம்மை

நாளும் பல்லாயிரம் விவாகரத்து
திருமணமோ பணத்திற்கு ஆடிடும் தெருக்கூத்து?
திருமணமும் வெறும் மண ஒப்பந்தம்
நீதிமன்றத்தில் மலிவாய் இரத்தாகும் சம்பந்தம்.

தாலியும் அறுத்துக் கட்ட நூல் கயிறானது?
இல்லறம் நல்லறமாக வாழ்ந்த வள்ளுவன் வாசுகி
பழம் கதையானது, வாழ்வும் மாயை என்றானது

மஞ்சள் குங்குமத்தில் மனைவியாய் கண்ணகி
காமச்சுவைக்கு மஞ்சத்தில் பரத்தைச் சீமாட்டி மாதவி
கோவலனும் இழிந்த காமுகனே
திருமணமும் அவனுக்கு வாணிபமே

கற்பும் மலிவு விலையானது, காதலால் பூஜிக்க யாருமின்றி
கோவலரும், தசரதர்களும், மலிந்த நிலையில்
பெண்களின் வாழ்வும் சோகச் சுமையானது
சம்போகிகளுக்கு காமம் திகட்டாச் சுவையானது

தந்தை வரம் காக்க-முடி துறந்து
கானம் போனவனோ தனயன்-ஸ்ரீராமன்
வண்ணான் மொழி கேட்டு-கர்ப்பிணியை
கானகம் அனுப்பியவனோ -ராஜாராமன்

காதலாகி கனிந்த பெண்மை-கணவனைப் பிரியாது
கானகம் சென்ற அம்மை, அசோகவனச் சிறையிருந்தும்
கணவனை மறவாத கன்னி
தீக்குளித்தும் மனம் நோகாத காதல்கனி

இராவணன் காவலில் சீதை சிறையிருந்ததோ
***அசோகவனம்***, மாலையிட்ட ஸ்ரீராமன் கர்ப்பிணியை
நாடு கடத்தியதோ ***சோகவனம்***

ஸ்ரீராமன் காடு போனது ஒரு முறை
காதலான சீதையின் வாழ்வில் காடு வீடானதும்
கண்ணீர் கதையானதும் பலமுறை

***கசந்த காதலைத் துறந்து***
***கணவன் ஸ்ரீராமனை விலக்கி வைத்த சீதை***
***காவியகாலத்து பெண்மை சொல்லிய புதிய கீதை***
***“பெண் விடுதலை”க்கு புதிய பாதை***

உடல் சேரும் உறவோ விலங்கினம்
ஒத்த இருமனம் சேரும் உறவோ திருமணம்
ஆன்மாக்கள் இணையும் உறவில்
சிவசக்தியின் ஆனந்த நர்த்தனம்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்***
Pax Ravichandra-08-10-2023

# நண்பன் பெருமை

கற்றோர் சபையில் நின் பெருமை கண்டு, தந்தையும் வானில் மகிழ
ஈன்ற பொழுதிலும் தன் மகனைச் சான்றோன் எனக் கேட்டு
பெற்ற வயிறு பூரிக்க, பெருமான் வள்ளுவன்
சொன்ன குறளுக்கு வாழ்வை அர்த்தமாக்கிய நண்பன்




பெற்றவருக்கு பெருமை சேர்த்த நின்புகழ் கண்டு
மலரோடு சேர்ந்த நாராய்-நண்பன் மனமும்
பூரித்து மணக்க, என்னே! உன் அருமை பெருமை



***"மாமருத்துவன் இறைவன்" உன்னையும்***
***காக்கும் கடவுளாய்*** உருமாற்றி, தன் பணி செய்யப்
பணித்தான், உயிர் காக்கும் அரும்பணியை
கொடையாக்கி, இறை மகன் நீ என மகிழ்ந்தான்



மட்டுநகர் மருத்துவர் கழகம்-உனக்களித்த பெருமை
நாம் கற்ற கல்லூரிக்கும் அழியாத மகிமை
இறைவன் தந்த வரமிது-ஐயா
ஏழ் ஏழ் பிறவியிலும் நீ செய்த தவமிது



கைத்தலம் பற்றியவள் அருகிருக்க
காதலும் வற்றாத நதியாய் பெருக்கெடுக்க
இருவரைக் கண்டு ஆனந்த கண்ணீர் துமிக்க
இறைவனைத் துதிக்கும் என் மனம்



வையகத்துள் வாழ்வாங்கு வாழ்தல் அரிது
வாழ்பவருள் ஒருவராய் நண்பனைக் கண்டு மகிழ்தல்
அமுதிலும் தேனிலும் இனிது- ஆசான் குணமகன்
குணமும் உன்னைப் புகழ்ந்தேற்ற உன் புகழ் பெரிது

என்றும் உன் புகழ் ஓங்க, எல்லோரும் இனிதாய் வாழ,
வற்றாத நதியாய், பொய்க்காத வான் கொடையாய்
நின் பணி சிறக்க மனம் கனிந்த வாழ்த்தும் நண்பன்




***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra 19.3.2022*



# சித்தார்த்த கௌதமன்





கண் பார்த்து நெஞ்செழுதும் காதல்போல் பேரின்பம்
உலகில் ஏதுண்டு?, புண்பட்டு, கண்ணீர்க் கடலில் மூழ்கி
தேவதாஸ்-பார்வதியாய் துன்புறும்
வேதனையும் காவியக் காதலில்தான் உண்டு

சீதையின் காதலிலும் கண்ணீர், பாஞ்சாலியின் இதயத்திலும்
செந்நீர், கண்ணகியின் சீற்றத்திலும் கணவனை இழந்த
காதலின் நெருப்பு, மௌனித் மாதவியின் சலங்கையிலும்
ஆடிக்களிக்க கோவலன் இல்லையென்ற தவிப்பு

சகுந்தலையின் விழிகளில் கண்ணீர்ப் பெருக்கு-காதலனே
தன்னை மறந்த பெருந்துடிப்பு, கணவனோடு காடேகி,
சிறையிருந்த சீதை, தீக்குளித்து, மீண்டும், காடேகிட-காதல்
மனதிலும் சீதாராமனா, இராஜாராமன் என்ற கசப்பு

கலிங்கம் குலைய, கண்ணீர் பெருக-கணவனுக்குப்
பகடைப்பொருளான பாஞ்சாலியும் காடேகி
பிள்ளையெல்லாம் இழந்து சோகத்தாயாகி- மகாராணியாய்
முடிசூடியும் மனதிலோ ஆற்றொண்ண துயரத்தின் நிலைப்பு

சிவதனுசை முறித்துமாலையிட்டவன் -சீதைக்கு
ஆறுதலாய் ஒரு மொழியேனும் சொல்லவில்லை
கர்ப்பிணியின் மனதை முறித்து, காடேகப் பணித்தவன்
நெஞ்சை நொருக்கிய பூகம்பத்தை யாரும் அறியவில்லை

மச்சத்தை வீழ்த்தி மாலையிட்ட மாவீரனுக்கு
மனைவியின் மானம் காக்க முடியவில்லை
பாண்டவருக்கு மாலையிட்ட மங்கையின் மனப்பாரம்
குருதி பூசி கூந்தல் முடித்தும் தீரவில்லை

கசையும், வசையும், தாங்கி இதயம் -சிலுவை சுமக்க
காதலும் கல்வாரிப் பயணம்தானோ? அன்பின் புது
வேதம்தானோ? பருவகால மயக்கம்தானோ?
காதலானால் இதயம் சோகத்தில் மூழ்கித்தவிக்குமோ?

கணடுதான் கண்களும் மயங்க-அழகை உண்டுதான்
நெஞ்சமும் கிறங்க கலந்துதான் இதயங்கள் பொங்க-
அன்பு இதயங்களின் ஆனந்தச் சங்கமம் காதல்
ஆனந்தப் புது வெள்ளம் நெஞ்சில் பொங்கிடும் தினம் காதல்

காணத்தவித்த நெஞ்சம், கண்டு குதூகலிக்க-பேரழகை
கண்களும் உண்டு காதல் பசி தணிக்க, வானத்தவராய் மாறி
உலகை மறக்க-மொழியோ பேச்சிழந்து மௌனத்தை
இசைக்க-, நெஞ்சிலே காதலின் வண்ணங்கள்,



அழகிய வானும் நிலவுமாய் அனுபவித்த இன்ப உறவு
மண்ணும், மழை நீருமாய் மனங்கள் கலந்த ஆனந்த நிகழ்வு
அலையும், கரையுமாய் மனங்கள் தழுவிடக் கூடிக
களித்த காதலின் இன்பப்பொழுது, கனவானது

கண்டு வியந்தேன் அணங்கோ பேரழகு-செவிகள்
உண்டு சுவைக்க மொழியோ இசை வடிவு, சுவாசத்தில்
வாசம் மணக்க-பூவிலும் வாசம்-காதலாகிச் சுவைக்க
அமுதும், முக்கனிச்சாறும் கலந்த அவள் நேசம்

கண் பார்த்து நெஞ்செழுதிய காவியம், காதல் மனம் வரைந்த
வண்ண ஓவியம், நிலாவென ஒளிவீசும் கனிமுகமோ பௌர்ணமி
பூங்குழலி புன்னகையில் முத்துக்கள் சிந்த, கன்னியோ
காதலின் புது ஸ்வரம், என் நெஞ்சினிலே காதலின் நவரசம்

கண் நோக்க, பொன்மேனியில் நாணச் செங்கோலம்
செவ்வாய் பூத்த குறுநகையில் ஆனந்தம்
பங்கயப் பாதங்களில் கொலுசின் காதல் கட்டியம்
அங்கயற் கன்னி முகத்திலே காதலின் ஆனந்த நாட்டியம்



வளையல் சினுங்கி, கட்டிக் கொள் காதல் சொல்
எனக் காதில் குசுகுசுக்க, செவ்வாயில் புன்னகை,
சிறு நுதலில் குங்குமம், கார் குழலில் மல்லிகை மணக்க
மையெழுதிய நீள்விழிகளால் மாலையிட்ட மங்கை

இதழமர்ந்த புன்னகை எழில் கூட்ட, கார் குழலமர்ந்த
மலர்களும் வாசம் காட்ட, கயல் விழிகள்
காதல் மொழி பேச, தையலாள் மொழியில் குயிலின் கானம்
நடையிலே கலாபமயிலின் கோலம்.

மனதிலே மைதிலியை கண்ட ஸ்ரீராமனின் தவிப்பு, மங்கை
உள்ளத்திலே சூடிக்கொடுத்த ஆண்டாளின் களிப்பு
மையிட்ட விழிகள்-காதலுக்கு மொய் எழுத
கண்பட்டுச் நாணிச் சிவந்த வெண்பட்டுக் கலைவாணி

வண்டு மொய்க்காத புது மலர், காதல் கிளி
கொத்தாத தேன் கனி, மையல் கொண்ட மனது
காதல் கவிதை நெய்ய, கண் மலர்ந்து சிரித்த
பெண் மலரின் காதல் வாசம்தான் என்னே!



காதலான இதயங்கள் ஜோடிகிளிகளாய் கொஞ்சியதும்
கனவானது, ஒற்றைக் குயிலாய் உருகி கரைய சோகம்
நிஜமானது, காதல் என்பது கனவோ, கற்பனையோ?
கானல் நீரோ, தேய்பிறை நிலவோ? விளங்காத புதிரானது

விழி வடித்த நீராலும் இமயச் சோகம் கரையவில்லை
மொழி வடித்த கவிதையிலும் சீதையின் சோக நிலை,
காளிதாஸனாய் வெண்மேகத்தை தூதுவிட்டேன்
சோகத்தில் கறுத்து மேகம் மழையாய் கரைந்ததடி

ஏழைப் புலவனாய் நாரையைத் தூதுவிட்டேன்-
நங்கையைத் தேடி காணாமல் போனதடி
அன்னத்தை தூது விட்டேன்-என் அழகு
தமயந்தியின் சேதி இன்றும் வரவில்லை தோழி

நினைக்கத் தெரிந்த மனதிற்கு, மறக்கத் தெரியவில்லை
சூடிக்கொடுத்த ஆண்டாளுக்கு என்னைச் சூட மனமில்லை
பாடிக்களித்த மீராவுக்கு என் மீது பரிவில்லை



நினைக்க வைத்தவளுக்கு மணம் முடிக்க இதயமில்லை
நெஞ்சை நிறைத்தவளை மறப்பதற்கு- மதுவைத் தவிர வேறு வழி
தெரியவில்லை, மாதுபோன பாதையில் தூது போனவர்களும்
திரும்பி வரவில்லை , மதுவே மருந்தான அவல நிலை

காதலும் கண்ணீர்க் காவியமோ?, தேவதாஸ் பார்வதியின
வண்ணம் கலைந்த ஓவியமோ? காதலாகி கரைந்து
இன்பக் கடலில் நீந்தி களிப்புற்ற இதயங்கள் கண்ணீர்
கடலில் மூழ்கித் தவித்திட-காதலும் கானல் நீரோ?

மாலை நேரம் மதுவோடும்-மங்கையின் காதல் நினைவோடும்
மலையோரம் அமர்ந்திருந்தேன், மந்தமாருதம் உடலை தழுவிச் செல்ல
பச்சை மலைகளின் பசுமை கண்களை கொள்ளை கொள்ள
டாங்! டாங்! டாங் மனதை நெருடிய விகாரையின் மணியோசை

சீவர ஆடையில் வரிசையாய் அசையும் தீபங்களாய்
செல்லும் பௌத்த துறவிகள் ஆனந்த வாழ்வைச் சொல்ல
போதையின் உச்சத்தில் பாதையோரம் விழுந்தேன்

கண் விழித்தபோது-என் அருகே வயதான பிக்கு, எழுந்து
அமர்ந்திட, புன்னகை பூத்தவர், இரு நாள் எம் விருந்தாய் நீங்கள்
இனியும் எம் விருந்து நீங்கள், உண்டு களைப்பாறுங்கள்
உணவளித்து போஷித்தவர், என்னிடம் எதையும் வினவவில்லை.

குளித்து, வெண்ணாடை அணிந்து உணவருந்தி
உலாவுகையில் புத்த விகாரையில் நிலவும்
பேரமைதி என்னைக் கவர்ந்திட உள்ளே நுழைந்தேன்-



கருணை பொங்கும் பெருமான் புத்தரின்
அழகிய சிற்பம் அமைதியளிக்க-
ஊது பத்தி -மலர் வாசம் மனதை நெகிழ வைக்க
அமர்ந்திருந்தேன்- பல நாட்கள்

மாதும், மதுவும் தராத அமைதியை,
தேவ சந்நிதி தந்திட
இதயத்தில் இன்ப அமைதி

ஒரு பௌர்ணமி நாள் விகாரையில் பெற்றோர்-
தம் புதல்வர்களை துறவறத்திற்கு அர்ப்பணிக்கும்
அழகிய காணிக்கைத் திருநாள்

என்னை அழைத்த தலைமைப் பிக்கு தம் அருகே
என்னை அமரவைத்தார், வரிசையாய் இளஞ்சிறார்கள்
அமர்ந்திருக்க- பிரித் ஓதிடத் தொடங்கிய சடங்கு
பெற்றோர் முகத்தில் மகன் புத்தனாகும் ஆனந்த நிகழ்வு



வாழ்வின் இன்பம் நுகராது, காதல் துன்பம் அறியாது,
இளமையின் இன்சுவை தெரியாது
தம்மைக் காணிக்கையாக்கும் திருநாள்
நான் காணாத அதிசயத் திருநாள்

வண்டு மொய்க்காத தேன்மலர்கள் பெருமானுக்கு
மலரஞ்சலியாக , ஏற்றிய இளஞ் சுடர்கள் தீப அஞ்சலியாக
தூய மனம் தூப அஞ்சலியாகத், தம்மை
அர்சனையாக்கும் சிறார்களின் அழகிய ஞான வேள்வி

ஆகுதிகளாய் தம்மை அளிக்கும் அழகு முகங்கள்
நெஞ்சைத் தொட, விழி வழியாய் மெல்ல வடியும் கண்ணீர்
இதயத்தில் அமைதியைத் தெளிக்கும் ஆனந்தப் பன்னீரானது
என்னுள் ஒன்று விழித்தது, இன்பம் பூத்தது

ஒவ்வொரு சிறுவனும் முன் வந்து அமர்ந்திட
சிரசை வழித்து-சீவராடை கொடுத்து, சீடராய் ஏற்றிட
பிஞ்சு முகங்களில் ஆயிரம் தாமரைகளின் மலர்ச்சி

என்னை மறந்தவன், எழுந்து முழந்தாட்படியிட்டு தலை குனிந்திட
எங்கும் ஒரே நிசப்தம்., தலைமைப்பிக்கு புன்முறுவலோடு என்
தலையை வருடிக் கொடுத்திட-சவரக் கத்தி, என் தலையில்
சோகத்தைக் கழித்து, "தம்மத்தை" எழுதிட என்னுள் புதிய எழுச்சி



பழையன கழிந்து புதியன தோன்றிட சீவர ஆடையின்
செந்தீயில், காதலும் எரிந்து சாம்பலாகிட, புடமிட்ட
பொன்னாய்- கன்னியை மறந்த சித்தார்தனாய் நான்.

கழியும் மயிரோடு கடந்த காலமும் கழிய-
மனமழிய-மங்கை நினைவழிய
புத்தம் புது மலராய் பூத்த புத்த மனம்

என்னுள் ஆனந்த அமைதி நிலவிட, பெருமான் புத்தர்
முன் பலநாள் தவமிருந்தேன், நின் கருணைதான் என்னே ?
காதலும், போதையும் தராத அமைதி கழிந்த வாழ்வோடு
கழிவாய்ப் போயிட, புத்தனாய்ப் பிறந்திட புதிய அழைப்பு

**புத்தம் சரணம் கச்சாமி, தம்மம் சரணம் கச்சாமி, சங்கம் சரணம் கச்சாமி**
இன்னிசையாய் என்னுள் அதிர்ந்திட, வரிசையாய்
ஒளிரும் தீபங்களாய் பிக்குகளின் வரிசையில்-பிக்குவாய்
நடந்திட சாலையோரம் நாதியற்ற அநாதையாய்
நாறிடக் கிடந்த வெற்றுச் சாராய புட்டி



மாதின் போதையும்-மதுவின் போதையும் மாறும்
காலத்தில் மறையும், ஆசை மனம் கழித்தால் தோன்றும்
சூனிய மனமே புத்த மனம், அதுவே நம் மெய் இயல்பு
நாமோ சச்சித்தானந்தம்
***அப்போ தீப பவ- உனக்கு நீயே ஒளியாகிப் போ***

***உண்மையை*** அனுபூதியில் ***சுவைத்திட என் தீர்த்த யாத்திரை***
சப்பே தத்தா பவங்க துதி தத்தா
(சகல உயிர்களும் நலமாய் வாழப் பிரார்த்திக்கின்றேன்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-09-10-2023

# சொன்னது நீதானா, சொல்

**Words Are Windows (or They're Walls)**

*I feel so sentenced by your words,*
*I feel so judged and sent away,*
*Before I go I've got to know,*
*Is that what you mean to say?*

*Before I rise to my defense,*
*Before I speak in hurt or fear,*
*Before I build that wall of words,*
*Tell me, did I really hear?*

*Words are windows, or they're walls,*
*They sentence us, or set us free.*
*When I speak and when I hear,*
*Let the love light shine through me.*

*There are things I need to say,*
*Things that mean so much to me,*
*If my words don't make me clear,*
*Will you help me to be free?*

*If I seemed to put you down,*
*If you felt I didn't care,*
*Try to listen through my words,*
*To the feelings that we share.*

உறவாடலின் சாளரமா?
உறவுகளை பிரிக்கும் தடுப்புச்சுவரா? செவ்விதழ்
உதிர்த்த வார்த்தைகள் தீச்சரமா?

ஒன்றும் புரியவில்லை
நிரபராதியை தண்டித்த உன் நீதி
நெஞ்சில் பாய்ந்த நெருப்பு கணையானதடி
என் நெஞ்சம் வலிக்குதடி

தண்டிக்கப்பட்ட கைதி நான்
போகுமுன், அறிந்திடத் துடிக்கின்றேன்
சொன்னதும் நீதான?-நீ
சொல்ல நினைத்ததும் இதுதானா?

புண்பட்ட நெஞ்சோடும்-உடைந்திடுமோ
நாம் காதல் என்ற பயத்தோடும்
மறுமொழி பகிருமுன்
உண்மையை அறியத் துடிக்கின்றேன்

உதிர்த்த மொழிகள் உறவை வளர்க்கும்
பலகணியா?.உறவைப் பிரிக்கும் கற்சுவரா?
ஒன்றும் புரியவில்லை
வார்த்தைகளால் தீர்ப்பு வழங்கிடாதே

நான் பேசும்போது என் மொழியிலும், உன் பேச்சை
செவிமடுக்கும்போதோ என் விழிகளிலும்
சுடர்விடும் என் காதலின் பேரொளியை
கண்ணே நீ காணவில்லையா ?

உன்னிடம் சொல்வதற்கு-எண்ணங்கள்
நூறு இருக்கு, இதயத்தின் உணர்வுகளுக்கு
இயம்பிடும் வார்த்தைகள் சிறையடி

சொல்லிப் புரியவைக்க காதல் பாடமல்ல
இதயங்களின் பரிபாஷை காதலடி
வார்த்தைச் சிறையில் கைதியாய் வாடாமல்
விடுபட எனக்கு உதவிடு

என் மொழிகள் உன்னை நோகடித்தால்
உன்னைப் புறக்கணித்தேன் என உணர்ந்தால்
என் அன்பின் ஆழத்தை அறிந்திட
துடிக்கும் என் இதயத்தை கேட்டுப்பார்

உன்னுள் துடிப்பது என் இதயமடி
என்னுள் தவிப்பது உன் இதயமடி
நம் அன்பின் ஆழத்தை நீ அறிவாய்
வார்த்தை கடந்த வேதமடி காதல்

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandr-10-10-2023

# சுபத்திரா அம்மை



பத்தாம் ஆண்டு மாணவருக்கு-***இரசாயனவியல்***
படிப்பிக்க வந்த இளமங்கை, பொட்டு வைத்த வட்ட
முகமோ பௌர்ணமி நிலவு, மாணவர்களை கட்டிப்போட்ட
அன்பினிலோ பொங்கிடும் தாய்மையின் உணர்வு

பதினோராம் ஆண்டில்-ஸ்நேகிதியாய், தாயாய்
மாறிய உறவு, ஒரு வலுவளவு, இருவலுவளவு
பங்கீட்டு வலுவளவு தாண்டிய பாசப்பிணைப்பு

பொது இரசாயனம், பௌதிக இரசாயனம், சேதன இரசாயனம்
என கற்கை நெறிகளை கவிதையாய் பாடிய ஔவை
கற்றலுக்கு வாழ்வை அர்ப்பணமாக்கிய பெண்மை
காவிய காலத்து சரஸ்வதி என்பதே உண்மை



ஆய்வு கூடமும் அறிவின் ஆனந்தக் கூடலாக
சேதன இரசானவியலில்-மனம் சங்கமிக்க, ஆண்டுகள் போக
சுவைகூடும் "***எதனோலிலும்***" இன்சுவையாக -எண்ணிட
நெஞ்சினிக்கும் அன்னையின் நினைவுகள்

சிரித்த முகம் " செல்லையா" டீச்சர் என்றே
இன்றும் அழைக்கும் பிள்ளை மனம்-உள்ளம்
எங்கும் உவகை வெள்ளம் பொங்க-என் சேதனத்தை
மாற்றிய தாயோ ***அன்பின் அதிசய இரசாயனம்***

***ஊக்கியாக*** ஊக்கமளித்த அன்னை, உவகையூட்டும்
***நைதரசொட்சாக*** பெண்மை, ***உறவுகளின்***
***ஆவர்தன அட்டவணையில்*** உயரிடத்தில் தாயாக
இன்றும் என் நெஞ்சில் வாழும் அம்மை

உடலோடு கலந்த ***திண்மமாய்***, உள்ளோடும்
குருதியில் ***திரவமாய்*** சுவாசத்தில் வீசும் ***உயிர்காற்றாய்***
தாயே நீ காட்டிய பேரன்பு

பல வருடங்களுக்கு முன்-பாதையில் கண்டு
கட்டியணைத்து, அன்பைச் சொல்லிய தாய்மை
நான் எப்போதும் Pax இன் பக்கம் என்றே
என்னைத் தன் பிள்ளையாக்கி, செல்லம் தந்த அம்மை

அமிலமா?, காரமா? **பாசிச்சாயத்தாள் கடந்த**
அன்னையின் அன்போ-இன்றும்
அமுதின் சுவையாய் மனதில் இனிக்கும் நிலைப்பு

கல்வித் தீபத்தை என்னுள் ஏற்றி வைத்த தெய்வங்கள்
நான் நூற்காத தவத்திற்கும் கேட்காத வரத்திற்கும்
இறைவன் ஈந்த அரிய வைரங்கள்
என் ஆசிரிய பெருந்தகைகள்



காலம் போனாலும்-இதயம் மறவாத இனிய எண்ணங்கள்
பொட்டும், பூவும் சிரிக்க-மஞ்சளும், குங்குமும் நிலைக்க
பல்லாண்டு தாயே நீ வாழ்க என்றே
இதயராகமாய் வாழ்த்தும் உன் பிள்ளை நான் அம்மா

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-24-08-2023*

# அன்னையும் ஆசானுமான அன்புருவு–உமா டீச்சர்

பிள்ளை கணபதியோ-அன்னை உமையவள் பிள்ளை
உமையவளோ-இன்று கணபதிபிள்ளைக்கே
மகளான , அதிசயத்தின் எல்லை



விளங்கமுடியாத விலங்கியலும், இரசாயனவியலும்
வியந்து படிக்க-நாளும் பொழுதும் -மனம்
பாடங்களைக் காதலாகித் தியானிக்க
இன்பவியலாக பாடங்களை மாற்றிய அன்னை



பொன்னில் வடித்தானோ பிரம்மன், பூவையை வண்ணப்
பூக்களால் வடித்தானோ பார்த்து அழகை வியக்க,
பூங்கொடி அழகிய முறுவலோ அன்பைச் சிந்தும் தாய் மடி-

கருங்குவளை விழிகள்-வெண்முத்துப் பல்வரிசை
வியந்து பார்க்க அழகோவியம்
பழகிப் பார்க்க தாயோ, அன்பின் காவியம்

பொன்மேனி வாசம் மணக்க, பேசும் மொழியில்
பாசம் பொங்க, நேசமாய் சொல்லித் தந்த பாடம்
எண்ணிட இன்றும் ஏங்கிடும் மனம்

சின்னத் தவளையை பிடித்து வந்தேன் என ஸ்நேகிதிகள்
செல்லமாய்ச் சீண்ட எனக்காய் பரிந்துரைத்த தாய்
என் எழுத்தையும், வரை படங்களையும் பாராட்டிய அன்னை
ஓய்வின்றி ஒவ்வொரு சனியிலும் பாடம் சொல்லித்த தந்த அம்மை

மண்புழு, கரப்பான், தவளை. எலி, சுறாவின்
உடற்கூற்றை ஆய்வு செய்ய சொல்லித் தந்து
விலங்கியலும் விரும்பிப் படிக்க, கல்வியை
வேள்வியாய் யாக்க கற்றுத் தந்த தேவ அன்னை

வெவ்வேறாய் பிரித்து வைத்த தவளை, எலியின்-
எலும்புகளை  கண்டு பிடித்தல் பரீட்சையாக
கற்பித்தலே கலையாக, கண்டு பிடித்து இன்புற்ற காலம்
இன்று கனவானது, பழங்கதையானது

உப்புக்களை கண்டு பிடிக்கும் பரிசோதனை
உற்சாகத்தைக் கூட்ட-கற்பித்தலால் கற்றலில்
இன்புற்று, கானம் பாடி, வானம் பாடியாய்
பறந்த பிள்ளை மனம் எண்ணிட ஏங்குது

பரீட்சையின்போது என்னைச் சுற்றி அழகு மாணவிகள் அமர்ந்திட
நடுவில் அமர்ந்த நானோ வெட்கத்தால் திண்டாட
“எழுந்து வாரும், இந்த இடம் உமக்கு ஏற்றதல்ல”
மனம் குளிர பரீட்சை எழுத நல்லிடம் தந்து உதவிய தாய்

என்னிலும் சிறந்த மாணவர் பலர் இருக்க, தன்
திருமணத்தின்போதும், தலைப் பிரசவத்தின்போதும்
தன் பாடங்களை நான் நடத்திட என்னைத் தெரிந்தவர்,
பல்லாண்டு போனபின் என்மேல் தாய் கொண்ட நம்பிக்கை
எத்தனை பெரிதென புரிந்தே மகிழ்ந்த பிள்ளை



வகுப்பில் ஒரு முறை நண்பர்கள் என்னை விரட்டிப்
பிடிக்க துரத்திவர, ஓடிச்சென்று டீச்சர் என்றே
அவர் சேலைத் தலைப்பை நான் பிடிக்க-தன்
பிள்ளையாய் என்னைப் பார்த்துச் சிரித்த அன்னை

இன்றோ தாய் மகனாய் உறவு வளர
அன்னை போனபின்-அன்னையாய்-என்னை
“மகனே” அழைக்கும் ஆனந்த அன்புறவு-

ஆண்டுகள் கடந்தும் அன்புறவு, ஆல்போல் தழைத்து
அருகு போல் வேரோடி, மூங்கில்போல் சூழ்ந்து முடிவில்லாது
வாழ்ந்திருக்க-தந்தையாய் அன்பை அள்ளிப் பொழியும்
அவர் கணவர், தாய் தந்தையரை வரமாய் தந்தே தன்
அன்பைச் சொல்லும்-இறை கருணைதான் என்னே!

கரைகாணாத கல்விக் கடலில் இன்றும் தொடரும்
என் பயணத்தில் காலத்தால் அழியாத ஆசான் உறவுகளில்
கற்பகதருவாய், காமதேனுவாய், கல்விச் செல்வத்தை
அள்ளித் தந்த அழகிய வள்ளல் அன்னை உமா
உறவுகளின் பரிணாமத்தில் அன்னைக்கு உயரிடம்
அன்பே என் வாழ்வின் குருபீடம்

என் கவிதைகளின் இரசிகை-என் காதல் கவிதைகள் கண்டு
வியக்கும் மங்கை தன் காதலை எனக்கு சொல்லிய ஸ்நேகிதி
கவிதையாய் அவர் காதலை நான் வடிக்க பாராட்டிய அம்பிகை
காலங்கள் போனாலும்,, கண்களில் மறையாத அழகுருவம்
கருத்தில் அன்னையாய், ஆசானாய் நெஞ்சம் பூஜிக்க-அம்மை
உமையவளாய் வீற்றிருக்கும் தாயோ தெய்வம்

***எல்லாப்புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
Pax Ravichandra-10-10-2023

# உன் கண்ணில் நீர் வடிந்தால்

காதற் கிளிகள் கட்டிய கூடு,கற்பனையில்
சொர்கமான வீடு, இன்றோ இரும்புச் சிறையாக,
கண்ணீரில் கழியும் பிள்ளை என் இரவுகள்

பள்ளி சென்று திரும்பும்போதும்
படுக்கைக்குச் செல்லும் போதும்-பெற்றோர்
சண்டையால் சிதையும் பிள்ளை மனம்
ஆனந்தம் குலைந்திட நாறிடும் திருமணம்





அன்பு வாழும் இல்லம் அஞ்சி நடுங்கிடும்
எரிநரகானது, கெஞ்சியும் கிடைக்காத அன்பால்
குழந்தை மனம் ஏங்கித் தவித்தது

தலையணை நனைந்திடக் கண்ணீரில் கழியும் இரவுகள்
நாளும் தண்டனையானது, பெற்றோர் இருந்தும்-
அநாதையான பிள்ளை, பெற்றவரிடமே -அன்புச்
பிச்சை கேட்கும்- ஏழ்மையின் இழிந்த நிலை

அன்னை மடியில் தலை வைத்து -ஆயிரம்
கதை பேசிடும் ஆசையோ நூலறுந்த பட்டம்
தந்தை தோளில் ஏறி உலகைப் பார்க்கத் துடித்த
எண்ணமோ வண்ணம் குலைந்த ஓவியம்

இருவர் கரம் பற்றி, இனிதாய் கதைபேசி
ஊர்வலம் வர-எண்ணமோ கலைந்த கனவு
கொஞ்சி மகிழப் பிஞ்சி மனம் போட்ட
வண்ணக் கோலமோ சிதைந்த உறவு

அன்பை பகிர்ந்து ஆனந்தம் நிலைக்க, பிரிவைத்
தவிர்த்து மண உறவு நிலைக்க -உறவுகளின் முயற்றி
தோல்வியில் முடிய, பிள்ளையின் முயற்சியோ
புள்ளி போட முன் கலைந்த வண்ணக் கோலம்

“விவாகரத்து” செய்து விடுதலை பெற்றவர்
திசைக்கொன்றாய் பறந்திட
பட்ட மரத்தில் சிதைந்த கூடு- அன்புப்
பசியால் வாடும் குஞ்சின் நிலையோ அவலக்கேடு

விழியில் நீர் எழுதி, விம்மும் நெஞ்சில்
குமுறும் சோக எரிமலை தாங்கி
விண்ணைப் பார்த்த விழிகள் கண்டு
காரும் கரைந்திட வானும் அழுதது

சோகச் சிறைவாசம் ஆயுள் தண்டணையாக
என் சொர்க்மே நரகாய் மாறிட செய்யாத குற்றத்திற்கு-
இறைவா ஏனிந்தக் கொடுந் தண்டனை? கண்ணீர் சிந்திட
தேடியும்-கடவுளே நீ கண் மறைந்ததும் தீராத வேதனை
என் வாழ்வோ அன்புச் சோதனை

*எல்லாப் புகழும் இறைவனுக்கே*
*இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க*
Pax Ravichandra-10-10-2023

# உன்னிடம் மயங்குகிறேன்



வண்ணப் பெண்ணழகை வர்ணிக்க, என்னிடம்
வார்த்தைகளில்லை, பொன்மேனி வாசத்தை சொல்ல
வண்ணப்பூக்களில் வாசமில்லை-பூக்கோலமிடும்
பூவையோ அழகின் அதிசயக்கோலம்

பூவையே வண்ணப் பூவாகி, நான் சூடும் மலரான
பெண்மை, காதலலே வரமாகி-கடவுள் தந்த
இன்பக் கொடையான மென்மை



வண்ணக் கருவிழிகளோ குவளை, மின்னும்
பொன்னுடலோ பூங்கொடி, பிறை நுதலில்
பொட்டோ பௌர்ணமி, பொன்மேனியிலோ அழகின்
செழுமை, விரிந்த கார் கூந்தலில் அருவியின் புதுமை

முத்துச்சரம் சங்குக் கழுத்தில் மின்ன, முல்லைச் சரம்
செவ்வாயில் புன்னகை சொல்ல, செவ்வாய் மொழியில்
இசைத் தமிழின் கீர்த்தனம், மெல்லின செஞ்சந்தன
மேனியில் திருமகளின் அழகின் நர்த்தனம்

காதல் சுரத்தை என்னிதயம் பண்ணிசைக்க,
காமன் ஐங்கணையும் என் நெஞ்சைத் துளைக்க
தழுவிடும் தென்றலிலோ பூமகளின் நறுமணம்
காதல் வலைபட்ட மானாய் என் மனம்

பார்த்து மயங்க வண்ண ஓவியம், படித்துச் சுவைக்க
காதல் காவியம், அழகின் அதிசயத் திரவியம்,-கிளி
கொத்தத் துடிக்கும் கிண்ணம் பழக்கன்னங்கள்-கவி
பாடும் நெஞ்சில் வசந்தத்தின் கோலாகலங்கள்

கண்டதும் காதலாகி மனம் துள்ள
உண்டது காதல் அமுதென்று விழிகள் சொல்ல
உள்ளமோ காதல் பண்பாடும் கவிக்குயிலானது
உயிரோ கலாபமயிலாய் நாட்டியம் ஆடுது

ஶ்ரீராமன் மயங்கிட்ட மிதிலையின் மைதிலியோ காதலி,
நளனைக் காதலில் வீழ்த்திய வீமனின் மகளோ தமயந்தி
மேனியிலோ திருமகளின் கோல இருப்பு-பிரம்மனும்
காமுற கலைமகளின் ஜொலிப்பு, அழகின் செழிப்பு



கொழு கொம்பின்றி முல்லையாய் மனம் தவிக்க
பாரி வள்ளலாய் இதயத்தேரில் என்னைப் படரவிட்டு
காதலால் எனை ஆட்கொண்ட பூவை
ஆண்டாளாய் தன்னை சூடத் தந்த பாவை

நாணிடும் அழகில் பெண்மையின் நாற்குணமும் மிளிர
நளினத்தை காட்டிய அபிநயம் பரதத்தை வெல்ல,
கவிதை சொல்ல மனம் கம்பனை அழைக்க
காதலாகி பூத்த, பூவை கவிதையில் நான் யாத்த பாவை

கண் பொழியும் காதல் மழையில் நனைந்த உள்ளம்
பூவாய் மலர, பெண் மொழிந்த பொன் மொழிகள்
காதல் தேனாய் இனிக்க, என்னை மறந்தேன்
வாழும் உலலை துறந்தே காதலில் விழுந்தேன்

யாழும், குழலும் யாழினி மொழியில் இசைக்க
தேனும், முக்கனியும் தேவதை புன்னகையில் இனிக்க
காதல் , காதல் என்றே நெஞ்சம் இசைக்க
காவிய அழகை கவிதையில் படைத்த மனம்

கம்பனும், காளிதாஸனும் போற்ற
பார்க்கப், பார்க்கப் போதை தரும் அழகு
பருகப், பருக அமுதிலும் இனிய காதல் உறவு
கன்னியோ, கலையாத இன்பக்கனவு

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
Pax Ravichandra-10-10-2023

# உறவுகள் தொடர் கதை

---

அன்னையைப்போல் உயர்ந்த உறவில்லை
உடன் பிறப்புகள்போல் உன்னத சொந்தமில்லை
உறவின் பிரிவால் நெஞ்சம் வலிக்கும், ஒன்றாய் வாழ்ந்த
வசந்த காலங்களை எண்ணி துடிக்கும் மனம்
கயிறறுந்த பட்டம்போல் அலையும்



மண் வீடோ உலகில் நம் கூடு- கூடு உடைந்திட
வான் வீட்டை நோக்கி பறந்திடும் உயிர்க்குருவி
கூட்டுக்கே சுடுகாடு-சுயத்திற்கு மோட்சமே விடு
கலங்காதே நண்பா களிப்போடு தந்தையைப் போற்று

உலகம் ஒரு சத்திரம்- எது இங்கு நிரந்தரம்?
மரணம் நோக்கி நாளும் நம் பயணிக்கும் வாழ்வோ
மெய்யறிவுக்கான ஒரு தீர்த்த யாத்திரை

கொண்டு வந்தது ஏதுமில்லை
கொண்டு போவதும் ஏதுமில்லை
பந்த பாசம் இறைவன் தந்த கொடை
மகிழ்ந்து நன்றி சொல்வது நம் கடமை



மரணம் என்று ஒன்றில்லை, வாழ்வு மாறுபடுகிறதேயன்றி
அழிவதில்லை, உலகம் நம் வீடில்லை, தந்தையின்
இல்லத்தில் எல்லோருக்கும் உண்டு உறைவிடம்
தூய மனத்திற்கே சத்திய தரிசனம்

பிறப்பு, இறப்பு வாழ்வின் இரு கதவுகள்
ஒன்றால் வந்து-மற்றொன்றால் போகும் பயணம்
மறு உலகின் கதவே மரணம்-மரணம் கூட வாழ்வே-
அறிந்து மனமே ஆனந்தக் கூத்தாடு

அன்னை மடியில் தொடங்கிய வாழ்வு, தந்தை மடியில்
சாவால் புது வாழ்வு, கண்ணீர் எதற்கு?-
மனமே இறைவனைப் போற்று- வீடு போகும்
சொந்தத்திற்கு ஆனந்தமாய் விடை கொடு

வீடே மோட்சம்-இறை கடாட்சம்
நண்பா கலங்காதே! கடவுள் நம்மோடு

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***

*Pax Ravichandra-10-10-2023*

# வண்ணக்கிளி

---

என்ன கிளி என, என்னைச் செல்லமாய்அழைக்கும்-எந்தன்
வண்ணக்கிளி மௌனித்துப்போனது-செல்லக்கிளிகளுக்கு
பாடம் சொல்லித்தந்த கிள்ளை மொழி-இன்று
உயரப் பறந்து “வீடு” போனது



கட்டழகும், கம்பீரத் தோற்றமும் நெஞ்சில் நிறைய
பிரயோக கணிதமும், பௌதிகமும் மனதில் பதிய
பாடம் சொல்லித் தந்த ஆசான்



காலம் பல கடந்தும் காணும்போதெல்லாம்
என்ன கிளி என வாஞ்சையோடு அழைக்கும்
எந்தன் நேசம் மறைந்து போனதே
பிள்ளை மனமும் புண்ணாய் ஆனதே

எல்லாம் மாயை என்றான உலகில், வாழ்வும்
கலையும் கனவாக, பள்ளி வாழ்வு-ஞான வேள்வியாக
பாசத்தை அள்ளிப் பொழிந்த குரு
அன்பின் கற்பகதரு

கால வெள்ளம்-உறவுகளை அடித்துச் செல்ல, பிரிவின் வேதனை
நெஞ்சை நெருப்பாய் சுட, கண்ணில் நீர் எழுதி-நெஞ்சில்
நினைவை எழுதி, வாச முல்லையை, பாசமலராய் வாழ்ந்த
ஆசான் உறவை எண்ணி அழும் சின்ன மனம்

என்ன கிளி என-செல்லமாய், செவி இனிக்க,
நெஞ்சம் குதூகலிக்க வாஞ்சையாய் அழைக்க
இனி யாருமில்லை, வண்ணக்கிளி இல்லாத உலகோ
வரண்ட பாலையான நிலை

எண்ணிட இதயத்திலோ பொங்கிடும் சோக அலை-
சொல்லியழ வார்த்தையின்றி சொல்லிடும்
கவிதையிலும் முகாரியின் அவலநிலை.

ஆடிப்பாடிய வாழ்வு இயக்கவியலாக, ஆனந்தக் கண்ணீரும்,
சோகக்கண்ணீரும் வடித்த நிலை- நீர்நிலையிலாக
பாடையில் போகும் நிலை- நிலையிலாக
மரணம் வாழ்வில் மாறாத ***திருப்புத்திரனானதோ?*** !

அந்தியில் ஒரு நாள் கல்லூரியில் கண்டவர் கண்கள் கலங்கிட,
விதி வலிது மகனே-உன் உயர் கல்வி தடையானது
விதியின் செயலே, உன்னால் அறிந்ததேன் விதியை,
மதியால் வெல்லாம் என்பது வெறுங்கனவே

செல்வமிருந்தும்-பிள்ளைச் செல்வங்களை மீட்க
செல்வமிழந்தேன், பிள்ளைகளோ என்னைப் பிரிந்து
நாடு கடந்தே உயிர் பிழைத்தார்
வலிது வலிது விதி வலிதே கலங்காதே மகனே

தந்தையாய் ஆறுதல் சொன்ன மாமனிதர்
மறைந்த மாயம்தான் என்ன?
மனமுடைந்து நான் அழத், தெய்வமே
சோதனைதான் என்னே!

மண்ணில் இறைவன் தன்னை விதையாய் விதைத்தே
மனிதனைப் படைத்தார்-வார்த்தை முளைத்திட-
வாழ்வு செழித்திட வாழ்ந்தவர்- மனித மனங்களில்
அன்பால் நிலைத்தார்-வார்த்தையைப் புறந்தள்ளி-உலகை
தனதாக்கி வாழ்ந்தவரோ தம்மை இழந்தார்

***மானிடரில் அரியரத்தினம்-மாசற்ற மனமோ***
***நவரெத்தினம், வாழ்க வாழ்கவே***
***அமரர் ஆன்மா அமைதியில் சாந்தி காண்கவே***

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-10-10-2023*

# பாசமலர்-விக்கி

என் பொன் வானத்து வெண்ணிலவை கருமேகம்
மறைத்ததுமேனோ?என் தேவகானத்து பூங்குயிலை
காலன் அகாலமாய்க் கவர்ந்ததுமேனோ?

வண்ணப் பூவாய் மலர்ந்தவனே- வாடி உதிர்ந்திட
பொன் வானாய் விரிந்தவனோ மடிந்து மறைந்திட
தள்ளாடும் என் உயிர்மூச்சு -அல்லாடும் என் இதயம்.

தேனாய், வான் அமுதாய் இனிக்கும் அரிய நட்பு
விண்ணாய், மண்ணாய் விசாலமான உன் அன்பு

ஆயிரம் கண்ணாடி மணிகள் நடுவில்
அற்புத வைரம் நீ
ஆயிரம் காகிதபூக்கள் நடுவில்-
என் இதயம் சூடி மகிழ்ந்த ரோஜா நீ

பொழுது சாயுமுன் என் வண்ணப் பூவே
நீ வாடிப்போனதுமேனோ?
விழுதாய் எனை தாங்கிய-உறவே
எனனைத் தனியே விட்டு பிரிந்ததும் ஏனோ?

நா சுவைக்க அறுசுவையும்-தினம்
நான் சுவைக்க அருஞ்சுவையாய் நட்பையும் ஈந்தவனே
நீயில்லா என் உலகோ -நிலவில்லா வான் ஆனது-
உன் நட்பில்லா என் வாழ்வோ முள்வனமானது

ஐயனே, என் ஆருயிர் நண்பனே
வான்கொண்ட விண்மீன்களும்-தேன் கொண்ட
வண்ணமலர்களும் வாழும்வரை, என் நேசம் மாறாது
என் நெஞ்சம் உன்னை ஒருபோதும் மறவாது-

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-10-10-2013

# விழி மொழியும் கவிதை

---



வில்லைகளுக்குள் தெரிவது
விழிகள் அல்ல -வேல்கள்
விழுந்தவை மான்கள் அல்ல
ஆண் மனங்கள்



இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க
எல்லாப் புகழும் இறைவனுக்கே
Pax Ravichandra

# யார், யார், அவள் யாரோ ?



கண்டு விழிகளும் பூவாய் பூத்து மலர, உண்ட செவிகளும்
கனிமொழியை மலைத்தேன் என்றே விளம்பி மலைக்க,
பொன்வண்டாய் கூத்தாடும் மனம் காதல் ரீங்காரம் இசைக்க,
வண்ண மலரான பாவை என்னைக் காதலில் வீழ்த்திய பூவை



மெட்டியயொலி காதலுக்கு கட்டியம் சொல்ல
கண்டு சிலிர்த்த மேனி கனிந்து நாணத்தை சொல்ல
கடை விழிப்பார்வையால் காதல் தந்த கன்னி
காதல் கிளி தீண்டாத செம்மாங்கனி

யார், யார் இவள் யாரோ என்றே மனம் தேட
வான் நிலவென்றே மனம் கூற
வாசமல்லிகையும், முல்லையும் ஒன்றான மங்கை
கம்பனும், புகழேந்தியும் காணாத அழகின் கங்கை

பௌர்ணமி நிலவைக் கண்டு- என் காதலும்
வளர் பிறையானது-எட்டாக் கனியென ஏங்கி
காளையர் மனங்களும் தேய்பிறையானது

தேன் வண்டுகளும் கண்டு மலரென மயங்கிட்ட பூவை
கண்டு மயங்கி ஆடும் என் மனமோ வண்ணத் தோகை
கண்ணனைக் கொண்டாடும் ராதை, வாசமலராய்
தன்னைச் சூடத் தந்த ஆண்டாளாய் கோதை

மலர்க்கோலமிடும் பாவையோ வண்ணப் பூவை
செங்கனி வாய் பூத்த நாணப் புன்னகையோ மல்லிகை
பார்க்கத் திகட்டாத அழகைப் பருகிய விழிகளில்
அமுதச் சுவை-இதயத்திலோ இனிக்கும் காதல் சுவை

மதி முகமும், மையளாவிய கயல்களும் என்னை மயக்க
ஐம்பூ விளையும் அமிர்த நிலமாய் கன்னி
கதிரவனைக் கண்டு மலர்ந்த பங்கயமாய் மங்கை
என் நெஞ்சில் பொங்கும் பூம்புனலாய்க் காதல் கங்கை

காதல் அமுதைப் பொழியும் நிலவு, என்றும்
என் நெஞ்சில் உலாவும் தேன்நிலவு
கண் பார்த்து நெஞ்செழுதிய காதலின் வரவு
மண்ணும், மழையுமாய்க் கலந்த இன்ப உறவு

பூங்குயில் கன்னங்களில் மாங்கனிச் சிவப்பூ-
தேனிதழ் மலர்ந்த புன்னகையில் முத்துச்சிரிப்பூ-பேரழகோ
பொன்னில் வார்ப்பூ, காண்பவர் மனங்களில் பூரிப்பு
காதலர் மனங்களில் களிப்பு

பூக்களும் பூவை அழகை கண்டு, என்ன பூ என்றே
பூத்த வியப்பூ, பாக்களும் மனதில் தோன்ற-மனமும்
கவிதையாய் காதலை பாடி மகிழ்ந்த உவப்பூ
காதலோ திகட்டாத அமுது, காமத்துப்பாலாய் இனிப்பு

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-10-10-2023